# <u>நூல் விளக்கம்</u>


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | **உன்னை நீ அறிவாயா** |
| ஆசிரியர் | : | சுவாமி பிரபஞ்சநாதன் |
| மொழி | : | தமிழ் |
| வகை | : | தொகுப்பு |
| முதற்பதிப்பு | : | 2017 |
| நூலின் அளவு | : | டெமி |
| பக்கங்கள் | : | 116 |
| தாள் | : | 11.6 |
| எழுத்து அளவு | : | 10 |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| கட்டமைப்பு | : | சாதா பைண்டு அட்டை |
| கணினி அச்சு | : | ஓம் கிராபிக்ஸ் |
| விலை | : | ரூபாய் 100/- |

# என்னுரை

**“தன்னை அறிய தனக்கொரு கேடில்லை”** என்று திருமூலரின் திருமந்திரம் தெள்ளத் தெளிவாக கூறுகின்றது. அதுப்போலவே, நீங்கள் எதை அறிந்து கொண்டால், வேறு எதையும் அறியத் தேவையில்லையோ, அதை அறிவதுதான் **“அறிவு”** என்று சாஸ்திரமும் அறிவுறுத்துகின்றது.

ஆதலால், நீங்கள் உங்களை அறிந்து கொள்வதினால் மட்டுமே, இந்த உலகத்தில் உள்ள அனைத்தையும் அறிந்து கொள்ளலாம். என்றால் உங்களால் நம்ப முடிகின்றதா? அது எப்படி என்னை அறிந்து கொள்வதினால், அனைத்தையும் அறிய முடியும் என்ற சந்தேகம் உங்களிடையே உண்டாவதை என்னால் அறிய முடிகின்றது.

ஆனால், இந்த பேருண்மையை அறிய வேண்டுமென்றால் இந்த நூலை முழுவதுமாக படித்து புரிந்து கொண்டால் மட்டுமே அந்த உண்மை விளங்கும். அதாவது, உங்களிடத்திலே **“அறியாமை”** என்ற துக்க இருள் உங்களை மூடி மறைத்து உள்ளது. அந்த

துக்கத்தைக் கொடுக்கின்ற இருளிலிருந்து, உங்களை சந்தோசம் கொடுக்கின்ற வெளிச்சத்திற்கு கொண்டுவர ஒரு விதமான முயற்சிதான் இந்த நூல்.

நீங்கள் எந்த வித முயற்சியும் செய்யாமல், இந்த இருளையே இன்பமாக நினைத்து, இதிலேயே இன்னும் இழுத்துப் போர்த்திக் கொண்டு ஆழ்ந்து தூங்கவே அனைவரும் விரும்புகின்றீர்கள்.

உங்கள் அனைவரையும் துக்கம் என்ற தூக்கத்திலிருந்து எழுப்பி, நீங்கள் தூங்குவதற்காக இங்கு வரவில்லை, தூங்காமல் தூங்கி சுகம் பெறுவதற்காக இங்கு வந்திருக்கின்றீர்கள் என்ற பேருண்மையை சாட்சாத் அந்த சர்வேஸ்வரன் கொடுத்த சாஸ்திரத்தின் வாயிலாக அடியேன் அறிந்ததை "**நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்**" என்ற திருமூலரின் திருமந்திரம் மீண்டும் தெள்ளத் தெளிவாக கூறுவதை நீங்களும் இந்த "**உன்னை நீ அறிவாயா**" என்ற நூலின் வாயிலாக அறியலாம்.

இந்த நூலின் வாயிலாக நீங்கள் எந்த வயதினராக இருந்தாலும் இந்த நூலை வாசிக்கும் போது, உங்களிடம் காணப்படுகின்ற அஹங்காரத்தை தட்டி எழுப்புகின்ற வகையில் "**நீ**" என்ற ஒற்றை வார்த்தைப் பதத்தை பல

இடங்களில் கையாண்டு இந்த புத்தகத்தை கொடுக்கின்றேன்.

இந்த “**நீ**” என்ற ஒற்றை வார்த்தை, உங்களிடையே உள்ள ஆணவம், கன்மம் (செயல்), மாயை என்ற மும்மலங்களையும் அழித்து, அந்த அழியாத ஆனந்த வஸ்துவை உங்களுக்கு தெள்ளத் தெளிவாகக் காட்டிக் கொடுக்கும் என்றால், அது மிகையாகாது.

**நன்றி**!

என்றும் அன்புடன்,

**சுவாமி, பிரபஞ்சநாதன்.**

ஓம்

ஸ்ரீ குருப்யோ நமஹ

# உன்னை நீ அறிவாயா?

## 1. கல்வி

**கற்க கசடறக் கற்பவை கற்றபின்**
**நிற்க அதற்குத் தக.**

(அதிகாரம்:கல்வி குறள் எண்:391)

'கற்பவை' என்பது, **அறம்**, **பொருள்**, **இன்பம்**, **வீடு** என்னும் உறுதிப்பொருள் உணர்த்துவதற்காக மட்டுமேயன்றி பிற தேவையற்ற அறிவைப் பெறுவதற்காக அல்ல. அதை முதலில் நீ புரிந்து கொள்ள வேண்டும்.

கற்பவற்றில் தேவையற்றவற்றை நீக்கி மேற்சொன்ன நான்கு பெரும் செல்வங்களான இலட்சியத்தை அடையவே உண்மையில் "**நீ**" கற்றல் வேண்டும்.

இந்த நான்கு விஷயங்களையும் "**புருஷார்த்தம்**" என்று சாஸ்திரம் முறைப்படுத்தி அவைகளை, சமஸ்கிருதத்தில் **தர்ம**:, **அர்த்த**:, **காம**:, **மோட்ச**: என்று அழைக்கின்றது.

இதனை அழகிய தமிழில் **அறம்**, **பொருள்**, **இன்பம்**, **வீடு** என்றும் நான்கு இலட்சியங்களாக வகைப்படுத்திக் கொள்கின்றது.

புருஷன் + அர்த்தம் என்பது புருஷார்த்தம் ஆகின்றது. அதாவது '**புருஷன்**' என்றால் மனிதன் என்றும், '**அர்த்தம்**' என்றால் இலட்சியம் என்றும் பொருள் உணர்ந்து கொண்டு இதனை "**மனிதனின் இலட்சியம்**" என்று புரிந்து கொள்ள வேண்டும். அதாவது நீ, இதை உன்னுடைய இலட்சியமாக புரிந்து கொள்ள வேண்டும்.

இதில் நீ முதலில் உன்னுடைய வாழ்வாதாரத்திற்கு தேவையான அத்தியாவசியப் பொருட்களை அடைவதற்காக பெரும்பாடு படுகின்றாய் என்றால், அவைகளில் உண்ண உணவு, உடுக்க உடை மற்றும் வசிக்கும் இடம் என உன்னுடைய தேவைகளை நீயே பூர்த்தி செய்துகொள்ள, அவைகளை தேடி நிச்சயம் அடைந்தாக வேண்டும்.

இவைகள் அனைத்தும் நீ வாழத் தேவையான அத்தியாவசியப் பொருட்கள் ஆகும். இதனை சாஸ்திரம் “**அர்த்த**:” அல்லது தமிழில் “**பொருள்**” என்று அழைக்கின்றது.

நீ, பொருளை முதலில் நாடுவதற்குக் காரணம், என்னவெனில் மற்ற ஜீவராசிகளைப் போன்றே தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள அவைகள் தங்கள் உணவுக்காக இங்கும், அங்கும் அலைவதைப் போன்றே, நீயும் உன்னுடைய உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டிய நிர்பந்தம் இருப்பதினால், முதலில் பொருள் பற்று கொண்டு, இன்றைய காலத்திற்கு ஏற்ப பணத்தை சம்பாதித்து, அந்தப் பணத்தைக் கொண்டு உணவையே நாடுகின்றாய். உன்னுடைய வயிறு நிறைந்த பிறகுதான் நீ மற்ற விஷயங்களில் நாட்டம் கொள்கின்றாய்.

மற்ற உயிரினங்களைப் போன்றே மனிதனாகிய உனக்கு மட்டும் இது விதி விலக்கல்ல. ஆனால், என்ன ஒரு பெரிய வித்தியாசம் என்றால், அவைகள் வயிறு நிறைந்ததும், அடுத்த வேலைக்குத் தேவையான உணவைக் கூட சேமித்து வைக்க வேண்டும் என்ற எண்ணம் இல்லாமல் திருப்தியாகச் சென்று விடுகின்றன.

ஆனால், மனிதனாகிய நீ மட்டும் உன்னுடைய வயிறு நிறைந்து விட்டது, உடுக்க உடை வந்து விட்டது, இருக்க

இடம் கிடைத்து விட்டது என்றாலும், நீ முழு திருப்தி அடைந்து விடுவதில்லை. இன்னும், இன்னும் வேண்டும் என்ற சுய நலத்தினால், உனக்கும், உன்னைச் சார்ந்தவர்களுக்கும் மேலும், மேலும் தேடுகின்றாய்.

உண்மையில் நீ திருப்தி அடைந்து விட்டால், அடுத்த ருசியை நாடி இன்னும் சில போகப் பொருட்களை விரும்ப மாட்டாய்.

ஆனால், நீ வயிறு நிறைந்து விட்டாலும், நாக்கின் ருசிக்காக இன்னும் சில திண்பண்டங்களை சாப்பிடுகின்றாய், உன்னுடைய மானத்தைக் காக்கும் உடை கிடைத்து விட்டாலும், ஊர் பகட்டிற்காக சில பட்டாடைகளை உடுத்துகின்றாய். உனக்கு வசிக்க இடம் கிடைத்து விட்டாலும், மேலும் சில கட்டிடங்களைக் கட்டி அதை அதிக வாடகைக்கு விட்டு மேலும், மேலும் **“பொருள்”** சம்பாதிக்க விரும்புகின்றாய்.

நீ ஏன் இப்படிச் செய்கின்றாய் என்றால், உன்னுடைய உடல் சுகத்தைக் கடந்து, உனது உள்ளச் சுகத்தை விரும்பி, மனம் போன போக்கில் அதிக ஆசை வயப்படுவதினாலேயே, உன்னால் உண்மையான சுகம் எது? என்று அறிய முடியாமல் போகின்றது.

இதிலிருந்து அத்தியாவசியப் பொருளீட்டுவதினாலேயே நீ திருப்தி அடையாமல், உண்மையான சுகத்திற்காகவே அதிக முயற்சிகளை மேற்கொள்கின்றாய். ஆனால், அந்த உண்மைச் சுகம் எது? என்று தெரியாமல், உன்னுடைய வாழ் நாளில் (**அர்த்த**:, **காம**:) "**பொருள்**" மற்றும் "**இன்பம்**" அடைவதிலேயே இந்த இரண்டு இலட்சியங்கள் பெரும் பங்கு வகிக்கின்றன.

இது போன்ற அடிப்படைத் தேவைகளில் வாழ்ந்து, அதனது இன்பங்களை பழகிவிட்ட பிறகு, நீ அதிலிருந்து கீழ் நிலை வாழ்க்கைக்கு செல்ல முடிவதில்லை. சில பொருட்களும், இன்பங்களும் உன்னை அடிமைப்படுத்தி வைத்துக் கொள்வதினால், உன்னால் அதிலிருந்து விடுபட முடியாமல் தவிக்கின்றாய்.

இந்த இன்பம் எங்கு உன்னிடமிடமிருந்து விலகி விடுமோ என்ற பயத்தினால் நீ உன்னுடைய எதிர்காலத்திற்காக திட்டமிடவும் செய்கிறாய். அந்த எதிர்காலத்திற்கு திட்டமிடல் என்பது, நீ உன்னையும், உன்னைச் சார்ந்த உறவுகளையும் மட்டுமே பார்க்கின்றாய். உனக்காகவும், அவர்களுக்காகவும் பொருள் சேர்க்க விரும்பி சுய நலத்துடன் சுகமாக வாழ விரும்பி எதையும் செய்ய ஆசைப்படுகின்றாய். ஏன்

இந்த அவல நிலை உன்னிடையே உண்டானது என்பதை நீ அறிய மறுக்கின்றாய்.

கற்ற கல்வியை புரிந்து கொள்ளாமல், அந்த கல்வியின் வாயிலாக அறிந்து கொண்ட நல்ல விசயங்களை நடை முறைப்படுத்த முடியாமல் உன்னை தடுப்பது எது? என்பதை என்று நீ அறிகின்றாயோ, அன்றே நீ உன்னை அறிந்தவனாகின்றாய்.

## 2. எது உன்னுடையது

இன்று நீ வாழும் வாழ்க்கையை வைத்தே, நீ எந்த மன நிலையில் வாழ்கின்றாய் என்பது உனக்குப் புரியும். உன் மனம் இந்த வாழ்க்கையை ஆனந்தமாக அனுபவிக்கின்றதா? அல்லது துயரமாக அனுபவிக்கின்றதா? என்பதை நீயே முடிவு செய்து கொள்.

உன்னுடைய இன்றைய இந்த வாழ்விற்கு காரணம், நேற்று நீ எப்படி வாழ்ந்தாய் என்பதையும், நாளை நீ எப்படி வாழப்போகின்றாய் என்பதற்கு, இன்று நீ எப்படி

வாழ்ந்து கொண்டிருக்கின்றாய் என்பதையும் நீ அறிய மறுக்கின்றாய்.

உன்னுள் இருக்கும் உன் மனசாட்சியைக் கேள்! அது உனக்கு உன்னைப்பற்றித் தெளிவாகக் கூறும்.

ஆம்!

**நீ செய்கின்ற செயலினால் விளைந்த நன்மை என்ன?**

நீ செய்கின்ற செயல்கள் சரியா?, அல்லது தவறா? என்ற எந்தவிதமான அடிப்படை அறிவும் இன்றி, மனம் போன போக்கில், மந்த புத்தியுடன், செக்குமாடு செக்கை சுற்றி சுற்றி வந்து கொண்டே இருப்பதுபோல, உன்னுடைய வாழ்க்கை இந்த உலக விஷயங்களிலேயே இருப்பதை நீ அறியவில்லையா?.

மேலும், செக்குமாடு செக்கை சுற்றி, சுற்றி வருவதினால் ஒருவகையில் நம் பயன்பாட்டிற்கு எண்ணையாவது கிடைத்துவிடும், ஆனால், நீ சுற்றும் இந்தச் சுற்றினால் யாருக்கு என்ன நன்மை இதுவரை உண்டானது?

**இனிமேல் என்ன நன்மை உன்னால் இந்த சமுதாயத்திற்கும் கிடைக்கப்போகின்றது?**

நீயே உன்னைப்பற்றி உண்மையில் அறிந்து கொள்ளவில்லை, நீ எப்படி மற்றவர்களைப்பற்றி அறிந்து

கொண்டு அவர்களுடன் சந்தோஷமாக வாழ முடியும்? யாரை ஏமாற்றப் பார்க்கின்றாய்? உன்னை நீயே ஏமாற்றிக் கொள்கின்றாய். அதுதான் உண்மை.

காரணம், யாருக்காக நீ வாழ்கின்றேன் என்கின்றாயோ, அது உண்மையில்லை, ஏன் எனெனில், உண்மையில் உனக்காகவே நீ வாழ்கின்றாய், உன்னுடைய சுய நலத்திற்காகவே நீ அனைத்தையும், அனைவரையும் உனக்கு சாதகமாக மாற்றிக்கொள்கின்றாய்.

ஆம், முழுவதுமாகவே நீ சுய நலத்துடன் செயல் புரிகின்றாய்.. எதைச் செய்தாலும், அதில் எனக்கு என்ன இலாபம் என்ற குறுகிய மனம் கொண்டுள்ளாய். அதற்காக பல குறுக்கு வழிகளை கையாளுகின்றாய்.

உன்னுடைய குறுகிய மனத்திலிருந்து சற்று வெளியே வா! வந்து, பரந்த மனதுடன் இந்த பரந்த உலகத்தைப் பார், இதில் எதை நீ படைத்தாய்?, எது உன்னால் உருவாக்கப்பட்டது?.

உன்னுடைய உடலே உன்னால் உருவாக்கப்பட்டது அல்ல. அந்த உடலிலே இருக்கின்ற புலன்களையாவது நீ படைத்தாயா?

அப்படி நீ படைத்திருந்தால் அந்த புலன்கள் உன் பேச்சை கேட்கவேண்டும் இல்லையா?

ஏன் அவைகள் கேட்க மறுக்கின்றன!.

நீ எதையும் படைக்கவில்லை, ஆனால் நீ அடைய விரும்புகின்றாய்.

நீ எதையும் படைக்கவில்லை, ஆனால் நீ அனுபவிக்க விரும்புகின்றாய்.

நீ எதையும் படைக்கவில்லை, ஆனால், நீ அழிக்க விரும்புகின்றாய்.

ஏன்? ஏன்?

முதலில், நீ ஓடுவதை நிறுத்தி விட்டு, நின்று சற்று நிதானமாக யோசித்துப்பார்!

நீ யாரென்று உன்னை நீயே கேட்டுப்பார்.

நீ உன்னை யாரென்று நினைத்துக்கொண்டு இருக்கின்றாயோ, அது உண்மையில்லை என்பதும் உனக்குப் புரியும். உன்னுள் இருப்பது என்ன என்ற உண்மையும் உனக்குப் புரியும்!

ஏதோ ஒன்று உன்னுள் இருப்பதினாலேயே, இந்த உலகை நீ பார்க்க முடிகின்றது.

ஏதோ ஒன்று உன்னுள் இருப்பதினாலேயே. நீ கேட்க முடிகின்றது.

ஏதோ ஒன்று உன்னுள் இருப்பதினாலேயே, நீ சுவைக்க முடிகின்றது.

ஏதோ ஒன்று உன்னுள் இருப்பதினாலேயே, நீ மணத்தை முகர முடிகின்றது,

எதோ ஒன்று உன்னுள் இருப்பதினாலேயே நீ உணர்ச்சியை உணர முடிகின்றது.

ஆம்! அந்த ஏதோ ஒன்று உண்மையில் உன்னிடம் இருக்கின்றது.

அது எங்கும், எதிலும், எப்பொழுதும் இருக்கின்றது.

அது எல்லையில்லாமல் பரந்து, விரிந்து இருக்கின்றது.

அது உன்னிலும், என்னிலும், எல்லாவற்றிலும் இருக்கின்றது.

ஆக அது இன்றி நீ இல்லை! நீ இன்றி அது இல்லை!

இந்த உண்மை உனக்குப் புரிந்துவிட்டால், நீ வந்த நோக்கம் உனக்குப் புரிந்து விடும்.

அப்படி இந்த உண்மை உனக்குப் புரியவில்லை என்றால் நீ மீண்டும், மீண்டும் இந்த பொய்யான உலகிற்கு வர வேண்டியது இருக்கும்.

இங்கு வாழும் வாழ்க்கையும் வீணாக இருக்கும். வாழ்ந்த வாழ்க்கையும் வீணாக முடியும்.

உன்னை நீ உணராத வரை உன்னுடையது என்று இங்கு எதுவுமே இல்லை. ஆனால், உன்னை நீ உணர்ந்து கொண்டாயானால், அனைத்துமே உன்னுடையதுதான் என்ற பேருண்மை உனக்குப் புரியும்.

## 3. எல்லாம் அது

உன்னுள் இருப்பது அது என்றால், எல்லாவற்றிலும் இருப்பதுவும் அதுவே!.

பிறகு நீ ஏன் உனக்கு மட்டும் உண்கின்றாய், மற்றவைகளுக்கு ஏன் உணவை கொடுக்க மறுக்கின்றாய்?

நீ ஏன் உனக்கு மட்டும் பார்க்கின்றாய், மற்றவைகளுக்கு ஏன் பார்க்க மறுக்கின்றாய்?

நீ ஏன் உனக்கு மட்டும் கேட்கின்றாய், மற்றவைகளுக்கு ஏன் கேட்க மறுக்கின்றாய்?

நீ ஏன் உனக்கு மட்டும் ஆசைப்படுகின்றாய், மற்றவைகளுக்கு ஏன் ஆசைப்பட மறுக்கின்றாய்?

நீ ஏன் உனக்கு மட்டும் சேர்க்கின்றாய் , மற்றவைகளுக்கு ஏன் சேர்க்க மறுக்கின்றாய்?

நீ ஏன் உனக்கு மட்டும் உயிர் இருப்பதாக நினைக்கின்றாய், மற்றவைகளுக்கு ஏன் உயிர் இருப்பதை மறக்கின்றாய்?

**நீ உன்னை மட்டும் பார்க்கின்றாய்! உன்னுள் இருப்பதை பார்க்க மறுக்கின்றாய்!**

உன்னுடைய உயிர் உனக்கு எப்படி முக்கியமோ, அதுபோலவே மற்றவைகளின் உயிரும் அவைகளுக்கு முக்கியம் என்பதை நீ என்று உணர்கின்றாயோ, அன்றே நீ உயிர் வதை செய்வதை (**புலால் உண்பதை**) விட்டு விடுவாய்.

எல்லா உயிர்களிலும் அது இருப்பதை நீ அப்பொழுதுதான் அறிந்து கொள்ள முடியும்.

எல்லா உயிர்களிலும் அது இருப்பதை நீ அறிந்து கொண்டவுடன், தற்பொழுது, உன்னுள் இருக்கும் அது உனக்கு நன்றாகத் தெரியும்.

அது இருப்பதை நீ நன்றாகத் தெரிந்து கொண்டால், உன்னை நீ உண்மையில் அறிந்தவனாக ஆகின்றாய்.

என்று நீ உண்மையில் உன்னை அறிந்து கொண்டாயோ, அன்றே நீ எல்லாவற்றையும் அறிந்தவனாக ஆகின்றாய்.

இதற்குமேல் அறிவதற்கு ஒன்றுமில்லை என்ற நிலை உன்னுள் உண்டாகும்.

**என்னிலே இருந்த ஒன்றை யான் அறிந்தது**
**இல்லையே**
**என்னிலே இருந்த ஒன்றை யான் அறிந்து**
**கொண்டபின்**
**என்னிலே இருந்த ஒன்றை யாவர்**
**காண வல்லரோ**
**என்னிலே இருந்திருந்து யான் உணர்ந்து**
**கொண்டெனே** - சிவவாக்கியர்.

ஆக, நீ அதுவாகவே இருக்கின்றாய்! என்ற மகா வாக்கியத்தின் பொருளை உணர்ந்து, அதன்படி அதன் சொரூபமாகவே வாழ்வதே ஞானம்.

இந்த உண்மையை உணர்ந்தவனே ஞானி! உணராதவன் அஞ்ஞானி.

இதில் நீ எதுவாக இருக்கிறாய்?

## 4. உணவுச்சக்கரம்

எல்லா உயிர்களிலும் "**அது**" இருப்பதை நீ அறிந்தவுடன், உன் அறியாமை முழுவதுமாக அழிந்து விட்டது என்று அர்த்தம் இல்லை.

காரணம், உன்னிடையே அஹங்காரமும் (நான்), மமகாரமும் (எனது), இருக்கின்றவரை உன் அறிவுக்கு "**நான் அது**" என்று புரியுமே தவிர அனுபவத்திற்கு வர இயலாது.

மேலும், உன் அறியாமையினால் இனி ஒரு சந்தேகம் உன் மனதில் எழுக்கூடும்.

அந்த சந்தேகம்!

என்னைப் போன்ற மனித உடல்களில் மட்டுமா அது இருக்கின்றது? தாவரங்களிலும், புழு, பூச்சிகளிலும், பறவைகளிலும், மற்றும் மிருகங்கள் என்ற அனைத்திலும் "அது" இருக்கும்போது, என் உடல் வளர்க்கத் தேவையான உணவாக எதை உண்டால் என்ன? என்ற எண்ணம் தோன்றும்.

மிருகங்களைக் கொன்று தின்னும் புலால் உணவு மட்டுமே எப்படி உயிர் வதை ஆகும்?

தாவரங்களின் உடல்களில் கூட **"அது"** இருக்கும் பொழுது, அதை அழித்து உணவாக உட்கொள்வது கூட உயிர் வதை ஆகாதா?

என்ற இது போன்ற சந்தேகங்களும், கேள்விகளும் உன் மனதில் எழும், அல்லது மற்ற அஞ்ஞானிகளினால் உண்டாக்கப்படும்.

இதனால், மரம், செடி, கொடிகள் என்ற தாவரங்களிலும், அசேதனப்பொருட்களிலும் **"அது"** இருக்கின்றதே, பின்பு எப்படி இந்த தாவரங்களையும் நாம் உணவாக உட்கொள்ள முடியும்? என்ற சந்தேகம் ஆரம்ப ஆன்மீக சாதகனான உனக்கு எழுவது இயல்பே.

இங்கு நீ ஒரு உண்மையை நன்றாகப் புரிந்து கொள்ள வேண்டும்.

ஒன்றேயான அது, அதாவது அந்தப் (பரம்) பொருள் எங்கும் பரவிக்கிடக்கும் பொழுது, உருவ வேற்றுமைகளால் உடல்கள் மாறித் தோன்றினாலும், ஈசுவரனின் மாயா சக்தியினால் தோற்ற மாயையில் ஒன்றை ஒன்று உணவாக உட்கொள்வது போன்ற

காட்சிகளை மட்டுமே இந்த கண்கள் என்ற புலன்களினால் நீ காண்கின்றாய்.

**“பரமாய சக்தியுள் பஞ்சமா பூதம்**
**தரம் மாறித் தோன்றும் பிறப்பு”** - ஔவையார்.

ஐம்பூதங்களான மண், நெருப்பு, நீர், காற்று, மற்றும் ஆகாயம், ஆகிய இவைகளின் சேர்க்கையே ஒவ்வொரு உடல் கிடைக்க காரணமாகின்றது.

**நிலம் தீ நீர் வளி விசும்பொடு ஐந்தும்**
**கலந்த மயக்கம் உலகம்! -** தொல்காப்பியம்.

இது எப்படியென்றால், ஐம்பூதங்களின் கலவைகளின் விகிதாசாரத்தின் அடிப்படையிலேயே, அந்த, அந்த ஜீவன்களின் கர்ம வினைக்கு ஏற்ப உடல் கிடைத்து, அந்த உடலுக்கு ஏற்ற உணவை உட்கொண்டு, அவைகள் வாழ்வது போன்று இந்த உலகம் உனக்கு தெரிகின்றது.

இதில் ஓரறிவு படைத்த உயிரினத்தின் உடல் முதற்கொண்டு ஆறறிவு படைத்த மனிதனாகிய உன் உடல் வரை அனைத்தும் பஞ்ச பூதங்களின் சேர்க்கையால், அதன் அதன் வினைக்கு ஏற்ப உடல்களால் மாறுபட்டு இருந்தாலும், அவைகள் இயங்க அந்த “**அது**” உள்ளே இருக்க வேண்டும்.

அந்த ஒன்றைக் கொண்டு, அதன் சக்தியினால் இயங்கும் இந்த உடல்கள் தங்களது உடலை வளர்க்க உணவை நாடுகின்றன.

இங்கு, மண்ணை உணவாக தாவரங்கள் உட்கொள்கின்றன.

இந்த தாவரங்களை உணவாக புழு, பூச்சிகள் உட்கொள்கின்றன.

இந்த புழு, பூச்சிகளை பறவைகள், மிருகங்கள் உணவாக உட்கொள்கின்றன.

இந்த தாவரங்கள், பறவைகள், மிருகங்களை, போன்ற அனைத்தையும் மனிதன் உணவாக உட்கொள்கின்றான்.

இறுதியில் இந்த மனிதனை மண் உணவாக உட்கொள்கின்றது.

இதுபோன்ற உணவு சுழற்சிதான் நடைபெறுகின்றதே தவிர, எதுவும், எதையும் உண்பதில்லை. அந்த **“அது”** என்றும், எக்காலத்திலும், எங்கும் பரவிக் கிடப்பதால், அதன் இருத்தல் தன்மை என்றும் மாறாமல் மாறியது போன்று காணப்படுகின்றது.

உதாரணமாக, ஒரு காகிதம் இருக்கின்றது, அந்த காகிதத்தின் இருப்பு, அதை தீயினால் எறித்தவுடன்,

சாம்பலாக மாறி விடுகின்றது, அந்த சாம்பலை உரமாக மரங்களுக்குத் தூவினால், அந்த மரம் நன்றாக வளர்ந்து மீண்டும் காகிதமாக மாற்றப்படுகின்றது. இதில் காகிதத்தின் இருப்புத்தன்மை மாறாமல் இருக்கின்றது. பார்ப்பதற்கு மாறியது போன்று காணப்படுவதையும் அறிய முடிகின்றது.

இதுப்போல, அந்த **"அது"** எங்கும் இருக்கின்றது. எக்காலத்திலும் இருக்கின்றது. அதன் இருத்தல் தன்மை மாறாமல் மாறியது போன்று இருக்கும். என்ற இந்த ஆச்சரியமான உண்மை உனக்கு புரிய வேண்டுமென்றால், நிச்சயமாக உன்னை நீ அறிந்தாக வேண்டும்.

**இந்த உணவுச்சக்கரத்தில் உன்னுடைய பங்கு என்ன?**

(இன்று மனிதனை மனிதனே ஆப்பிரிக்கா போன்ற நாடுகளில் உணவாக உட்கொள்ள ஆரம்பித்துள்ளான். நல்லவேளை இங்கு நம் நாட்டில் இன்னும் அந்த நிலை வரவில்லை. அதனால், நாம் தப்பித்தோம்!).

இப்படியே, இந்த உணவுச்சுழற்சி நடைப்பெறுகின்றதே தவிர, இங்கு எதுவும் அழிவதும் இல்லை, தோன்றுவதும் இல்லை.

பிறகு ஏன் மிருகத்தை மட்டும் உணவாக உட்கொள்ளக்கூடாது?

உண்டால் என்ன?

அதுவும் உணவுதானே என்றால், ஆம், நீ மிருகங்களுக்கு உணவு போன்றே, மிருகங்களும் உனக்கு உணவுதான். அதில் சந்தேகம் இல்லை.

ஆனால், இங்கு ஓர் உண்மை உனக்கு புரிய வேண்டும்.

அதாவது, உனக்கே உண்டான உன்னுடைய உண்மையான குணத்தை நீ அடையாமல், உன்னுடைய உண்மையான சொரூபத்தை நீ அறிந்து கொள்ள முடியாது.

**எது உன்னுடைய உண்மைக்குணம்?**

அது உன்னுடைய தற்போதைய இயல்பான சத்துவ குணமான மனிதகுணம் என்பதை நீ மறந்துவிட்டாய்.

எப்படியென்றால், நீ உண்ணும் மிருக உணவினால், உன்னுடைய இயல்பான மனித குணத்தையும், மனித அறிவையும் இழந்து விட்டாய்!.

அதனால்தான், உன் சிந்தனைகள் எல்லாமே அழியக்கூடிய அசேதனப்பொருட்களின் மீது உனக்கு

ஆசையை உண்டாக்குகின்றது. என்றுமே அழியாத அந்த சேதனப் பொருளின் மீது உனக்கு இன்றுவரை ஆசை உண்டாகவில்லை.

மேலும், மிருக உணவினை உண்பதினால், நீ மிருகம் போலவே வாழ முயற்சிக்கின்றாய். மேலும், மாமிச உணவினால் உனக்கு கோபம், குரோதம், லோபம், மோகம் மற்றும் மாச்சரியம் என்ற தீய குணங்கள் உண்டாகி உன்னுடைய உண்மைக் குணங்களான அன்பு, இரக்கம், பொறுமை, பணிவு மற்றும் ஆனந்தம் என்ற நல்ல குணங்களை இழந்து நிற்கின்றாய்.

எனவே நீ அந்த ஒன்றை அறிய வேண்டுமென்றால் நிச்சயமாக உணவு விஷயங்களில், உன்னுடைய புலன்களை கட்டுப்படுத்த வேண்டும். முதலில் நீ மனித குணத்திற்கு வர வேண்டும். அதன் பிறகு தெய்வீக குணத்தைப் பெற வேண்டும்.

ஆசைகள் அற்ற, ஆனந்தமயமான அந்த ஒன்றை நீ அறிய வேண்டுமென்றால், அதற்காகவே, நீ புலால் உணவை விட்டு விட வேண்டும்.

**தன்ஊன் பெருக்கற்குத் தான் பிறிது ஊன்உண்பான்**
**எங்ஙனம் ஆளும் அருள்.** - திருக்குறள்

தன் உடலை வளர்க்க விரும்பி, மற்ற உயிர்களின் உடலைத் தின்பவன், எவ்வாறு இறைவனின் அருளைப் பெற முடியும்? ஒரு நாளும் பெற முடியாது!.

அருள் உள்ளம் கொண்டவன் பிறிதொரு உயிர்க்குத் தீமை செய்ய அஞ்சுவான். புலாலுண்ணாமை அவனுக்கு இயல்பாய் அமையும். அவன் தான் வாழ விரும்புவது போலவே மற்ற எல்லா உயிர்களும் வாழ வேண்டும் என்று விரும்புவான்.

அவன் மற்றதன் உடம்பை உண்டு, தன் உடல் உரம் பெறுவது பற்றி எண்ணமாட்டான். அப்படிக் கருதி மற்றோர் உயிரின் ஊனை உண்கின்றவன் எப்படி அருளுடையவனாக இருக்க முடியும்?

புலால் உண்பவன் அதன் சுவையை மட்டும் கருதி உடல் வளர்ப்பதை நோக்கமாகக் கொண்டிருப்பான். ஆனால், அருள் வாழ்வு பெறவேண்டும் என்பதில் உறுதியாக இருக்கின்ற ஒருவனுக்குப் புலால் உண்ணத் தோன்றாது.

ஏற்கனவே ஊன் உண்பவனும், அருள் வாழ்க்கை வேண்டினால், புலாலைத் துறந்துவிடுவான். கதறக் கதறக் கழுத்தை அறுத்து குருதி வழிய இரக்கமின்றிக் கொல்லப்பட்ட உயிரிலிருந்து கிடைக்கப்பெற்ற

புலாலைச் சுவைத்து உண்பவன் எவ்வாறு அருளாட்சியுடையவனாக இருக்க முடியும்? என்பது வள்ளுவரது வினா.

சதா இங்கும், அங்கும் நிற்க முடியாமல் அலைந்து, திரிந்து கொண்டிருக்கின்ற மிருகங்கள், பறவைகள் போன்ற மாமிச உணவுகளை தவிர்த்து, ஒரே இடத்தில் நிலையாக நிற்கின்ற தாவர உணவுகளை உண்பதினால் உனக்கு சத்துவ குணம் உண்டாகி, உன்னுடைய மனம் அலைபாயாமல் ஒரே இடத்தில் நின்று அந்த ஒரே வஸ்துவை உனக்கு காட்டிக்கொடுக்கும்.

உண்மையில் "**இருப்பதெல்லாம் இறைவனே**" என்பதால் உன்னுள்ளும் அவன் (அது) இருப்பதால், அவன் வாயிலாகவே இந்த உலகத்தையும், உலகப் பொருட்களையும் நீ காணவும், அனுபவிக்கவும் முடிகின்றது என்பதே உண்மை ஆகும்.

ஆக, எல்லாம் ஒன்றே என்பதால், இங்கு காண்பவனும், காணப்படும் பொருளும், காட்சியும் ஒன்றே தவிர, அது உன்னிடமிருந்து வேறாக இல்லை.

எனவே, இந்த உணவுச் சக்கரத்தில் பல உடல்களை எடுத்து சுற்றி வருகின்ற நீ, உன்னுடைய தற்போதைய இந்த மனித உடல் தரம் மாறி, வேறு ஒரு உடலை

எடுக்க வேண்டிய கட்டாயம் எதனால் என்றால், உன்னை நீ அறியாமல் இருப்பதினால்தான் என்றால் அதை நீ நம்புவாயா?

இதில் இங்கு எதுவும் உண்மையில் உற்பத்தியாவதும் இல்லை, அழிக்கப்படுவதும் இல்லை. இருப்பதெல்லாம் அது மட்டுமே. ஆகவே "**அது இன்றி எதுவும் இல்லை**". (அல்லது) அவனின்றி ஒன்றுமில்லை என்பதே உண்மை!.

இதைப் புரிந்து கொள்ள உன்னால் முடியவில்லை என்றால், நீ மீண்டும், மீண்டும் பல பிறவிகளாக பல உடல்களை எடுத்து வந்து இந்த பேருண்மையை அறிந்து கொள்ள முயற்சிக்க வேண்டும்.

ஆனால், கிடைத்தற்கரிய இந்த மனித உடலைக் கொண்டும், மற்ற உயிர்களுக்கு கிடைக்காத ஆறாவது அறிவைக் கொண்டும் இந்த பேருண்மையை நீ அறியத் தவறினால், உன்னுடைய இந்த மனிதப் பிறவி வீண் என்பதை அறிந்து கொள்ள வேண்டும்.

## 5. மூன்று குணங்கள்

உன்னிடம் மூன்று குணங்கள் உள்ளன. அவைகள், **தாமச குணம்**, **ராஜஸ குணம்** மற்றும் **சத்துவ குணம்** என்பதாகும்.

உணவு என்பது உடம்பை வளர்ப்பதற்கு மட்டுமல்ல. உள்ளத்தை வளர்ப்பதற்கும் உதவுகின்றது. அதனாலேயே, சாஸ்திரங்களில் ஆகாரத்தைப் பற்றி அநேக நியமங்கள் சொல்லப்பட்டிருக்கின்றது.

நல்ல குணத்திற்கு மிகவும் முக்கியமானவையாக உணவு பெரும் பங்கு வகிக்கின்றது. இதிலே மிக முக்கியமாக சத்வ குணத்தை வளர்க்கச் செய்யும் படியான உணவு இருக்க வேண்டும் என்பதுதான் மிக முக்கியம். அப்பொழுதுதான் உன்னைப் பற்றி உன்னால் அறிந்து கொள்ள முடியும்..

அன்பு, கருணை, பணிவு, ஒழுக்கம், சந்தோஷம் எதற்கும் பதற்றப்படாமல், சாந்தமான மன நிலையில் அனைவரின் மீதும் பிரியமாக எப்பொழுதும் இருந்து கொண்டே, நல்ல சிந்தனா சக்தியுடனும், கிரியா

சக்தியுடனும் இருப்பதைத்தான் சத்வ குணம் என்ற சாத்விகம் கொண்ட மனிதனின் நிலையாகும்.

எப்பொழுதும் ஒரே பதற்றம், ஆசை, கோபம், விருப்பு, வெறுப்பு மற்றும் உணர்ச்சி வசப்படுவது, இவை எல்லாம் ரஜஸ் - ரஜோ குணம் அல்லது ராஜஸ குணம் பெற்ற மனிதனின் நிலையாகும்.

ஒரே கருமித்தனம், சோம்பேறித்தனம் மந்தத்தன்மையுடன் இருப்பது, எதிலும் ஆர்வமில்லாமல் காணப்படுவது, அடிக்கடி தூங்கி வழிவது போன்றவைகள் தாமஸ குணம் கொண்ட மனிதனின் நிலையாகும்.

இப்படி மூன்று குணங்கள் உன்னிடமும் இருக்கின்றன. இந்த மூன்று குணங்களும் அனைவரிடமும் காணப்படும்.

இந்த மூன்று குணங்களும் உன்னிடமும் வந்து போகின்ற குணங்கள்தான். ஆனால், இதில் எந்த குணம் உன்னிடம் மேலோங்கி இருக்கின்றதோ, அதைப் பொறுத்தே உன்னுடைய நிலையும், செயலும் இருக்கும்.

இது, நீ உட்கொள்ளும் உணவைச் சார்ந்து, உனக்கு இந்த மூன்று குணங்களின் தன்மை கூடவோ, குறையவோ செய்யும்.

அதிகமான உப்பு மற்றும் மிருக உணவுகளை உட்கொண்டால் உன்னிடம் தாமஸகுணமும், ராஜஸ குணமும் அதிகமாகக் காணப்படும்.

அதுவே, சமைத்து அதிக நேரம் ஆன உணவுகளையும், காரம், புளிப்பு அதிகம் உள்ள மசாலா உணவுகளையும் நீ அதிகம் உண்டாயானால் நீ தாமஸ குணத்திற்கு வந்து விடுவாய்.

அதுவே, இனிப்பு, துவர்ப்பு சுவை கொண்ட பழங்கள், காய்கறிகள், தாது உப்புக்கள் கொண்ட கீரைகள் இவைகளை அதிகம் உண்பதினால் நீ சத்துவ குணத்திற்கு வந்து விடுவாய்.

மனித குணங்களிலேயே உயர்ந்த குணம் இந்த “சத்துவ குணம்” மட்டுமே ஆகும்.

இது உயந்தவர்களின் குணம். இந்த குணத்திலேயே எப்பொழுதும் இருக்க விரும்பினால், நிச்சயமாக நல்ல உணவைத் தேர்ந்தெடுத்து உண்ண வேண்டும்.

சத்வ, ரஜஸ், தமஸ்களை முக்குணமென்றும், இந்த மூன்று குணங்களையும் கடந்த நிலையை **“குணாதீதன்”** என்று சாஸ்திரம் சொல்லியிருக்கிறது. அதாவது குணங்களைக் கடந்த ஞானிகளின் நிலை.

கீதையில் பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் இந்த மூன்று குணங்களைப் பற்றி விரிவாகக் கூறி அர்ஜுனனிடம் **"நிஸ்த்ரைகுண்யோ பவ"**, என்று இந்த **"மூன்று குணங்களும் இல்லாதவனாக, அவற்றுக்கும் மேலே போ"** என்கிறார்.

**"குண த்ரய விபாக யோகம்"** என்றே (கீதையில்) ஒரு அத்தியாயம் உள்ளது.

அதிலே சத்வ குணம், ரஜோ குணம், தமோ குணம் ஆகிய ஒவ்வொன்றின் உண்மைத்தன்மையையும் பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் தெளிவாகக் கூறுகிறார்.

இங்கே சத்வ குணத்தவரால் சத்வகுண அபிவிருத்திக்காகச் சாப்பிடப்படும் உணவு எப்படியிருக்கும், அதேபோன்று ரஜோ, தமோ குணம் கொண்டவர்கள், உண்ணும் உணவும், செய்யும் காரியங்களும் எப்படி இருக்கும் என்று மிக அழகாக கீதையில் பகவான் கூறுகின்றார்.

மேலும், சுத்தமான உணவு என்றால் சத்வ உணவு என்றே பொருள். இன்று நீ நினைத்துக்கொண்டிருப்பது போல ஹைஜீனிக் உணவுகள் அல்ல.

சத்வ குணத்தைத் தரும்படியான சாத்விக உணவாக அது இருக்க வேண்டும். அந்த உணவுகளால் கிடைக்கும்

நன்மைகளைப் பற்றியும் கீதையில் தெளிவுபடுத்துகின்றார்.

இதிலிருந்து நீ தெரிந்து கொள்ள வேண்டிய உண்மை என்னவென்றால், சரியான உணவை நீ உட்கொள்ளாமல், உயர்ந்த ஆத்ம ஞானத்திற்கு ஆசைப்படுவது எவ்வளவு அறியாமை என்பது புரியும்.

## 6. உன்னுடைய நம்பிக்கை

உன்னிடத்தில் இருக்கும் ஈடுபாடு, சிரத்தை என்ற இரண்டும் இரண்டு கண்களைப் போன்றது.

சிரத்தை என்றால் அக்கறையாகச் செய்வது, அல்லது கவனமாகச் செய்வது என்று பொதுவாக பொருள் கொள்கின்றோம். கவனக்குறைவாக இருந்தால் ‘அசிரத்தையாயிருக்கிறான்’ என்கிறோம்.

ஆனால், இங்கு சிரத்தை என்பது நம்பிக்கை என்பது தான் சரி.

ஆத்மார்த்த விஷயங்களில் மெய்பொருளைக் கண்டுணர்ந்த நம்முடைய பெரியோர்கள் முன்னோர்கள்

ஏற்படுத்திக் கொடுத்திருக்கிற ஆசார, அநுஷ்டானங்களில் நம்பிக்கை மிகவும் அவசியம்.

கீதையில் பகவான் "**ச்ரத்தாவான் லபதே ஞானம்**"

சிரத்தையுள்ளவன்தான் ஆத்மாவைப் பற்றிய அறிவைப் பெறுகின்றான் என்கின்றார். காரணம் கேட்காமல் பெரியவர்கள் சொல்வதை நம்பிக்கையோடுச் செய்ய வேண்டும்.

இன்று அவநம்பிக்கை கொண்ட மக்கள் அதிகம் வாழும் கலியுகம் இது ஆகும்.

"தெரியாதவற்றை எப்படி நம்புவது?"

என்று அவர்கள் கேட்கின்றார்கள்.

நமக்கு நேராகத் தெரியாத அதி ஸூக்ஷ்மமான விஞ்ஞான தத்வங்களை எற்கும் இந்த மக்கள், ரிஷிகள் போதித்த மெய்ஞ்ஞான தத்துவங்களை ஏற்க மறுக்கின்றார்கள்.

"**ஸத்யான் நாஸ்தி பரோ தர்ம**:" என்று சத்தியமே பரம தர்மமென்று அத்தனை சாஸ்திரங்களும் சொல்கின்றன.

சத்தியத்துக்கு மேலே எந்த தர்மமுமில்லை என்று கூறுகின்ற சாஸ்திரம் அவரவர்கள் சவுகரியங்களுக்காக எதையாவது மாற்றிக்கொள்ள நிச்சயமாக அனுமதிக்காது.

ஆனால், இன்றைய நிலை அப்படியா உள்ளது. இறைவழிபாடு, பூஜை, புணஸ்காரங்கள், மந்திரங்கள் மற்றும் வேள்விகள் என்று எல்லாவற்றிலும் நம்முடைய தேவைகளுக்காக அனைத்தையும் மாற்றிக் கொள்வது மஹா பாவம் ஆகும்.

ஆக பெரியவர்கள் கூறிய சாஸ்திரத்தை நீ நம்பி அதில் கூறப்பட்டுள்ள ஆசார அனுஷ்டானங்களை செய்ய விரும்பினாலோ, அல்லது செய்து கொண்டிருந்தாலோ அதை சிரத்தையுடன் செய்தால் மட்டுமே உனக்கு பலன் உண்டாகும்.

ஏதோ கடமைக்கு அன்றாடம் அதைச் செய்வதினால் எந்த வித நற்பலனும் உண்டாகாமல் அது பாவமாக மாறிவிடும்.

உன்னுடைய சிரத்தையிலும் மூன்று வகைகள் உண்டு என்று கீதையில் பகவான் “**ச்ரத்தா த்ரய விபாக யோகம்**” என்று ஒரு அத்தியாயமே கொடுத்திருக்கின்றார்.

இங்கும் உன்னிடம் இருக்கும் மூன்று குணங்களின் அடிப்படையிலேயே சிரத்தை உண்டாகும் என்றும் கூறுகின்றார். இதில் எந்த குணம் உனக்கு மேலோங்கி இருக்கின்றதோ, அதற்கேற்ப உன்னுடைய சிரத்தை உண்டாகும்.

அவரவர்கள் பண்ணும் பூஜை, யஜ்ஞும், தபஸ், தானம் எல்லாவற்றிலுமே இதிது சத்வம், இதிது ரஜஸ், இதிது தமஸ் என்று கூறுகின்றார்.

நீ மனம் கொந்தளிக்காமல், கட்டுப்பட்டு, அமைதியாகவும் அன்பாகவும் இருக்கின்ற உயர்ந்த நிலை கொண்ட 'சாத்விகம்' என்ற குணத்தை அடைய வேண்டும்.

இதைவிட உயர்ந்தது குணாதீத, மனோதீத நிலைகள் என்றாலும், அது நமக்கு தற்பொழுது எட்டாக்கனி.

நாம் முதலில் ஸத்வ குணவான்களாக மாறிய பிறகுத்தான் குணாதீத நிலைக்குப் போக முடியும். எனவே, நீ முதலில் குணங்களில் சிறந்ததான ஸத்துவ குணத்தை அடைவாயாக.

## 7. வருணாசிர தர்மம்

சத்துவ குணத்தை அடைய விரும்பும் சாதகனுக்கு பெரும் தடையாக இருப்பது இன்றைய உலகியலில் காணப்படும் பிறப்பால் இவன் உயர்ந்தவன், இவன் தாழ்ந்தவன் என்ற வருணாசிரம முறை. இந்த முறையின் காரணமாக இது போன்ற உயர்ந்த ஆன்மீக விஷயங்கள் சாதாரண பாமரன் அறிந்துகொள்ள முடியது என்பது போன்ற ஒரு தோற்ற மாயையை உருவாக்கியுள்ளனர்.

முதலில், இதிலிருந்து வெளியே வரவேண்டும் என்பதற்காக மட்டுமே இங்கு இதைப் பற்றி விளக்கம் கொடுக்கப்படுகின்றது.

இந்திய பாரம்பரியத்தின் சனாதன தர்மம் உயர்ந்த கருத்துக்களை கொண்டது. அதில் ஒன்றுதான் வருணாசிரம தர்மம்.

சனாதன தர்மம் என்பது இந்து மதத்தில் வலியுறுத்தப்படும் ஒட்டு மொத்த அறங்களின் தொகுப்பு. அதியற்புதமான கருத்துகளை கொண்ட சனாதன

தர்மத்தில் கிருஷ்ண பகவானே கீதையில் வருணாசிரமப்படி ஒழுக்கத்தை வலியுறுத்துகிறார்.

வருணாசிரம தர்மத்தின் கருத்துகளை புரிந்துகொண்டவர்கள் தவறாக புரிந்துகொண்டு இருக்கிறார்கள். மேலும் விளக்கத்தையும் தவறாக அளிக்கிறார்கள் என்பது தான் உண்மை. மேலும், ஒரு உண்மை என்னவெனில் வருணாசிரமம் என்பது பிறப்பால் வகுக்கப்படுவது அல்ல என்பதுதான் அடிப்படையான உண்மைக் கருத்து.

வருணாசிரமம் மனிதனை நான்காகப்பிரிக்கிறது. அதாவது,

- பிராமணன் - துறவி
- சத்திரியன் - அரசாள்வோன்
- வைசியன் - வணிகன்
- சூத்திரன் - சேவையாளன்

**பிராமணன் என்பவன் யார்?.**

பிரம்ம ஞானத்தை அடைய முயற்சி செய்பவர்கள் மட்டுமே பிராமணர்கள். பிரமத்தை பற்றிய பிரக்ஞையே இல்லாதவன் எப்படி பிராமணன் ஆகமுடியும்.

பிராமணன் என்ற பதத்தின் பொருள் என்ன என்று பார்த்தால் பிரம்மத்தை அறிந்தவன் பிராமணன். தனது வாழ்நாளை உலக சுகங்களுக்கு மட்டுமே பயன்படுத்துபவன் எப்படி பிராமணன் ஆகமுடியும்.

அதாவது ஒரு மனிதன் இவ்வுலகவாழ்கையில் நன்கு பக்குவம் அடைந்தபின் இறைவனை பற்றியும், தன்னைப்பற்றியும் சிந்திக்க ஆரம்பிக்கிறான். பின் அதனை நோக்கிய பயணத்தை ஆரம்பிக்கிறான்.

இங்கு அவனது பயணத்தை செவ்வனே நிறைவேற்ற, முன்பே இறைவனை அறிந்த யோகிகளும் முனிவர்களும் அவனுக்கு உரிய வாழ்க்கை முறைகள், உணவுமுறைகள், ஒழுக்கங்கள், பயிற்சி முறைகள் ஆகியவற்றை வரையறை செய்துவைக்கிறார்கள். இவற்றை அவன் பின்பற்ற ஆரம்பிக்கும் கட்டத்தில் தான் அவனை “**பிராமணன்**” என்று அழைத்திருக்கிறார்கள்.

இதை உறுதிப்படுத்தும் விதமாக மந்திரங்களில் தலையாய மந்திரமாக கருதப்படுவது காயத்ரி மந்திரம். இந்த காயத்ரி மந்திரத்தை பிறப்பால் பிராமணர் அல்லாதவர்களுக்கு உபதேசிப்பதில்லை என்ற கொள்கையும் நம்மிடையே நிலவுகின்றது.

ஆனால் காயத்திரி மந்திரத்தை அறிந்து வெளிப்படுத்தியவர் விசுவாமித்திர மகரிஷி. அவர் பிறப்பால் பிராமணனா என்று பார்த்தால் இல்லவே இல்லை, அவர் ஒரு சத்திரியர்.

கௌசிகர் எனப்படும் பேரரசனாக இருந்தவர். வசிஷ்ட முனிவரிடம் உண்டாகிய பிரச்சனைக்குப்பின் கடுந்தவ வலிமையால் பிராமணனாக அறியப்பட்டவர்.

அதுபோலவே, கொள்ளைக்காரனாக பிறந்து, வாழ்ந்து வந்த வால்மீகி தன்னை உணர்ந்த காரணத்தினால் பிராமணன் ஆனார்.

இதிலிருந்தே வருணாசிரமம் பிறப்பால் அமைக்கப்படவில்லை என்று நாம் அறியமுடிகிறது.

பின்பு ஏன் அது பிறப்பை மையமாகக்கொண்ட வலிமையான கொள்கையாக உருமாறியது என்று சிந்தனை செய்தால், சத்திரியர்கள் எனப்படும் பிரிவை சேர்ந்தவர்கள் மட்டுமே தலைமுறை தலைமுறையாக பிறப்பை மையமாக கொண்ட இனமாக இருந்திருக்கின்றனர். ஏனெனில், அவர்கள் சந்ததியினரே அரசாளும் உரிமை கொண்டிருந்ததினால் இந்த நிலைமை நிலவியது.

இந்த ஒரு பிரிவின் ஆதிக்கம் மற்ற மூன்று பிரிவினர்களிடமும் பிரதிபலித்திருக்கிறது. அதாவது விருப்பத்தின் பேரில் பிராமணனாக மாறியவர்கள் தன் குழந்தைகள் மேல் இருந்த பற்றின் காரணமாக அவர்களுக்கும் வலுக்கட்டாயமாக கொள்கைகளை திணித்திருக்கிறார்கள்.

குரு சிஷ்யனாக பின்பற்றப்பட்டு வந்த பிராமண ஒழுக்கம் தந்தை மகன் என்ற சங்கிலித்தொடருக்கு மாறியது. இதே விசயமே மற்ற பிற பிரிவுகளுக்கும் பிரதிபலித்திருக்கிறது.

காலவெள்ளத்தில் அது பிறப்பையே அடிப்படையாக கொண்ட பாகுபாடாக மாறியிருக்கிறது. அது மட்டுமின்றி நிலம் மொழி ஆகிய பிரிவுகளுடனும் இணைந்து இன்று ஏகப்பட்ட சாதிகளாக வடிவெடுத்திருக்கின்றது.

• பிராமணன் என்பது இறைவனை தேடுபவர்களை குறிப்பது. இவர்கள் எவ்வுயிருக்கும் தீங்கு செய்யாது இறைதேடுதலை நோக்கி பயணம் செய்வது மட்டுமே இவர்களின் தர்மம்.

• சத்திரியன் என்பது நாட்டை அரசு செய்யும் பதவிகளில் இருக்கும் முதன்மை மற்றும் துணை பதவி வகிப்பவர்களை குறிப்பது. அரசாங்கத்தின்

விதிமுறைகளை பின்பற்றுவது இவர்களின் முக்கிய தர்மம் அதைவிட மக்களுக்கு நலம் செய்வதே இவர்களின் தலையாய தர்மமாக இருக்கவேண்டும்.

• வைசியன் என்பது பணத்தை முதலாகப் போட்டு வணிகம் செய்வோரை குறிப்பது. இவர்களின் கடமை மக்களுக்கு தரமான பொருட்கள் அல்லது சேவையை வழங்குவது சரியான விலை நிர்ணயம் செய்து தொழில் செய்வது இவர்கள் பின்பற்றவேண்டிய தர்மம்.

• சூத்திரன் என்பது அனைத்து தொழிலாளர்களையும் குறிப்பது, தனது தொழிலை செம்மையாக செய்வது தரமாக செய்வது இவர்கள் தர்மம்.

மேலும் இந்த நான்கு வருணத்தாருக்கும் பொதுவான கடமைகளாக குறிப்பிடப்பட்டுள்ள திருடாமை, கொல்லாமை போன்ற தர்மங்களையும் முதன்மையாக கடைபிடிப்பது. இவைதான் சனாதன தர்மம் குறிப்பிடும் வருணாசிரமத்தின் ஒட்டுமொத்த சாராம்சம்.

இன்றைய சூழ்நிலையில் ஒரு மனிதனே சிலநேரங்களில் வைசியனாகவும் சிலநேரங்களில் சூத்திரனாகவும் நடக்கவேண்டி இருக்கும் அவன் இருக்கும் நிலையை பொருத்து அதற்குரிய தர்மத்தை

கடைபிடிக்கவேண்டியதுதான். மற்ற சாதிப்பாகுபாடுகள் எல்லாம் பிதற்றல்களே தவிர வேறு இல்லை.

அதாவது இறைவனை அறிய விரும்புபவர்கள் பிராமண தர்மத்தை தான் கடைபிடிக்கவேண்டும்.

இதுதான் கீதையின் சாராம்சம். எனவே நீ இன்றுமுதல் பிராமணனாகவே பிராமண தர்மத்தை கடைப்பிடித்து, இந்த ஆத்ம ஞானத்தை அடைய முயற்சிசெய்.

## 8. நான்குவகை ஆசிரமங்கள்

அடுத்து, நான்கு வகை ஆசிர தர்மங்களையும் சாஸ்திரம் விளக்குகின்றது. அவைகள், பிரம்மச்சரியம், இல்லறம், வானபிரஸ்தம் மற்றும் சந்நியாசம்.

இந்த ஆசிரமத்தில் உள்ளவர்களுக்கு தர்மமானது இரண்டு வகையாக கூறபட்டிருக்கிறது.

அவைகள் ஒன்று சாமான்ய தர்மம், மற்றொன்று விசேக்ஷ தர்மம். சாமான்ய தர்மத்தை விட விசேக்ஷ தர்மம் மிக முக்கியமானது.

**சாமான்ய தர்மம்:**

**-----------------------------**

இது பிரம்மச்சரியம், இல்லறம், வானபிரஸ்தம் மற்றும் சந்நியாசம் போன்ற எல்லா ஆசிரமத்தில் உள்ளவர்களுக்கும் உள்ள பொதுவானது.

**விசேக்ஷ தர்மம்:**

**----------------------------**

இது வர்ண, ஆசிரமத்திற்கேற்றவாறு அமைவது. இது மாற்றத்துக்குட்பட்டது.

**நான்குவகை ஆசிரம தர்மங்கள்:**

**====================================**

பிரம்மச்சரியம், இல்லறம், வானப்பிரஸ்தம் மற்றும் சந்நியாஸம் ஆகும்.

**பிரம்மச்சரியம்**

*****************

மாணவப்பருவம், சாஸ்திரத்தை படித்தல், அறிவை அடைதல், பொருளை சம்பாதிக்க கூடாது. குருவுக்கு பணிவிடை செய்தல், அறிவை அடைய வேண்டுமென்றால் எளிமையாக வாழ வேண்டும்.

பிரம்மச்சாரி குருவை சாதாரண மனிதராக பார்க்காமல், குருவிடம் குற்றம் குறைகள் கண்டு அலட்சியம் செய்யாது, இறைவனாக நினைக்க வேண்டும்.

ஏனெனில் குரு என்பவர் தெய்வ வடிவானவர். குருவின் மனம் விரும்பும்படி பணிவிடை செய்வதே ஒரு பிரம்மச்சாரிக்கு இலக்கணம்.

இல்லற சுக போகங்களில் ஈடுபடாது, குருவிடம் தன் உடல் - மனம் ஒப்படைத்து, தர்ம சாத்திர நூல்களை கற்றுத் தெளிய வேண்டும். பிரம்மச்சாரி, குருகுலக் கல்வி முடிக்கும் போது, கல்விக் கற்றுக் கொடுத்த குருவுக்கு குருதட்சணை வழங்கியபின் “சமாவர்த்தனம்” எனும் சடங்கு செய்து கொண்டு கிரகஸ்த ஆசிரமத்திற்கு (இல்லற வாழ்விற்கு) நுழையலாம்.

# இல்லறம்

*************

இல்லற வாழ்வில் ஈடுபடுபவன் அறவழியில் பணம் ஈட்டி, இல்லறத்தை நல்லறமாக நடத்த வேண்டும். இவர்கள் பஞ்ச மகாயக்ஞங்கள் செய்வது சிறந்தது என இந்து சமய வேத வேதாந்த சாஸ்திரங்கள் கூறுகிறது.

உடல் மற்றும் வீடு போன்ற பொருட்களில் “ நான் - எனது ” (அகங்காரம் - மமகாரம்) என்ற கர்வம் இன்றி வாழ வேண்டும்.

பொறுப்புணர்வு பெற்ற மகன்களிடம், குடும்பப் பொறுப்புகளை ஒப்படைத்து விட்டு, கிரகஸ்தன் (இல்லறத்தான்), தன் மனைவியை மகன்களிடம் ஒப்படைத்துவிட்டு அல்லது தன்னுடன் அழைத்துக் கொண்டு வானப் பிரஸ்த ஆசிரம (காட்டில் வாழ்தல்) தர்மத்தை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

ஐந்து விதமான யக்ஞம் செய்தல், தானம், தவம் செய்தல், தியானம் செய்வதற்கு சிறிது நேரம் ஒதுக்குதல்.

**யக்ஞம்:**

இது ஐந்து வகையாக பிரிக்கப்பட்டு இருக்கிறது. தேவயக்ஞம் - இறைவழிபாடு, ரிஷியக்ஞம் - ரிஷிகள் எழுதிய புராணங்களை படித்தல், பித்ருயக்ஞம் - சிரார்த்தம், தர்ப்பணம் போன்ற பித்ரு வழிபாடு, மனிதயக்ஞம் - மற்ற மனிதர்களுக்கு நல்லது செய்தல், உதவி புரிதல், பூதயக்ஞம் - மற்ற உயிரினங்களுக்கு உபகாரம் செய்தல், உணவு அளித்தல்.

**தானம்:**

மற்றவர்களுக்கு பொருளுதவி செய்தல்.

**தவம்:**

**உற்ற நோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை அற்றே தவத்திற்கு உரு' - குறள்**

என்று முதற் குறளிலேயே தவத்துக்கு விளக்கம் தந்துள்ளார் வள்ளுவப்பெருமான்.

ஆம்! உண்மையாகத் தவம் என்பது தனக்கு வரும் துன்பங்களைத் தாங்கிக் கொள்வதும், அவ்வாறு வந்த துன்பங்களுக்குக் காரணமானவர்களுக்கும், மற்றவர்களுக்கும், மற்ற ஜீவராசிகளுக்கும் யாதொரு துன்பத்தையும் செய்யாமல் இருப்பதே தவம் ஆகும்.

அதை விடுத்து காட்டிற்கு சென்று கண்ணைமூடிக்கொண்டு உட்கார்ந்திருப்பதல்ல தவம்.

**தியானம்:**

மன அமைதியுடன், ஏக மனதுடன் ஆத்மதியானம் செய்வதற்கு நாள்தோறும் நேரம் ஒதுக்குதல் வேண்டும். உனக்கு பிடித்தமான குருவின் மூர்த்தியையோ அல்லது கடவுளின் திரு உருவத்தையோ மனதினால் தியானிப்பது மிகவும் சிறப்பு.

இதையெல்லாம் “**கர்ம காண்டம்**” என்றும் அழைப்பர்.

**வானபிரஸ்தம்**

*****************

கடமைகளை துறந்து விடுதல், தான் செய்து வந்த செயல்களையும், பொறுப்புக்களையும் மற்றவர்களிடம் ஒப்படைத்து விடுதல், முழுநேர தியானத்தில் ஈடுபடுதல். இதற்கு உபாஸனா காண்டம் என்றும் கூறுவர்.

வானப்பிரஸ்த ஆசிரமவாசிகளின் முதன்மையான கடமைகள் தர்மம், தவம், இறைபக்தி மட்டுமே. வானப் பிரஸ்த தர்மத்தில் வாழ்பவர்கள், கிடைக்கும் உணவுகளை சுவை கருதாது உண்டு வாழ வேண்டும். தாடி, மீசை முடிகளை நீக்கக் கூடாது. தினமும் மூன்று முறை குளிக்க வேண்டும். தரையில் படுக்க வேண்டும்.

**சந்நியாஸம்**

***************

சாஸ்திர சிரவணம், மனனம், நிதித்யாசனம் செய்தல்.

கர்மங்களினால் (சாத்திரத்தில் கூறிய செயல்களால்) கிடைக்கும் நல்லுலகங்களும் கூட துயரத்தை தரும் என்ற பேருண்மையை உணர்ந்தவர்கள், உடமைகள்,

உறவினர்கள் மற்றும் வைதீக கர்மங்களை துறந்து சந்நியாச தர்மத்தை ஏற்க வேண்டும்.

துறவி கௌபீனம் (கோவனம்) அணிந்து கொண்டு, கமண்டலம், தண்டம் கையில் வைத்து கொள்ளலாம். சத்தியமான சொற்களையே பேச வேண்டும்.

மேலும்,

1. மௌனம் வாக்கின் தண்டம்,

2. பலனில் பற்றுள்ள செயல்களை செய்யாமல் இருப்பது உடலின் தண்டம்,

3. பிராணாயாமம் செய்வது, மனதின் தண்டம்,

இந்த மூன்று தண்டங்களை (த்ரி தண்டி) கைக் கொள்ளாத துறவி, வெறும் மூங்கில் தடியை சுமப்பதால் மட்டும் சந்நியாசியாக மாட்டான்.

உணவை பிட்சை எடுத்து, அதில் கிடைப்பதில் மகிழ்ச்சி கொள்ள வேண்டும். துறவிக்கு, உரிய காலத்தில் பிட்சை உணவு கிடைக்கா விட்டாலும் வருத்தப்பட மாட்டான். அதே போல, நல்ல உணவு கிடைத்தாலும் மகிழ்ச்சி அடைய மாட்டான். ஆத்ம ஞானத்தில் நிலை பெற்ற துறவியிடம் இருமை எனும் இன்ப - துன்பம், மான -

அவமானம், குளிர் - வெப்பம் போன்ற உணர்வுகள் காண முடியாது.

மேற்கண்ட ஆசிரம தர்மங்களில் வாழ்வதற்கே சனாதன தர்மம் அறிவுறுத்துகின்றது. இதில் அவரவர் ஆசிரம தர்மங்களில் இருந்தவாறே ஆத்ம ஞானத்தை அடைய முயற்சி செய்ய வேண்டும்.

## 9. பிரபஞ்ச நியதி

இவ்வாறு, நீ எந்த ஆசிரம தர்மத்தில் இருந்து கொண்டு செயல் செய்தாலும், அந்த செயலுக்கு உண்டான நன்மை, தீமைகளை நீ அடைந்தாக வேண்டும்.

நீ செய்யும் எல்லா செயல்களுக்கும் பலன்கள் கட்டாயம் உண்டு.

இந்த செயல் பலன்கள் இரண்டுவிதமானது.

ஒன்று திருஷ்டப்பலன். இது நீ நேரிடையாக அனுபவிப்பது.

மற்றொன்று அதிருஷ்டபலன் - இது உன் கண்ணுக்குத் தெரியாத பலன்.

(உ-ம்) தானம் செய்யும் கர்மத்திற்கு உனக்கு கிடைக்கும் பலன் புண்ணியம். இது கண்ணுக்கு தெரியாத அதிருஷ்டபலன்.

இந்த பாவ, புண்ணியங்கள் சுக துக்கங்களை கொடுத்துவிட்ட பின்னர் தீர்ந்து விடும். சேர்ந்து விட்ட பாவ புண்ணியங்கள் பலன் கொடுக்க கால அவகாசம் இருக்கிறது.

இந்த சுக துக்கங்களை அனுபவிக்க உடலும், உலகமும் இருக்க வேண்டும். இப்படிப்பட்ட உடலுடன் பிறக்க வேண்டும் என்று தீர்மானிப்பது உன்னுடைய பாவ,புண்ணீயங்கள்தான்.

**“அவரவர் வினை வழி, அவரவர் அனுபவம்”**

வினை என்பது செய்யும் செயல் ஆகும்.

நாம் செய்யும் செயலை வைத்தே நம்மை மதிப்பீடு செய்வார்கள். இன்று செய்கின்ற செயலை வைத்தே நாளைய பலனை பார்க்க முடியும்.

**“தினை விதைத்தவன் தினை அறுப்பான், வினை விதைத்தவன் வினை அறுப்பான்”.**

என்பது முதுமொழி.

அதாவது, நீ எதை விதைக்கின்றாயோ, அதையே அறுவடை செய்யமுடியும்.

மேலும் இந்த இயற்கையின் நியதிப்படி எதை நீ விதைத்தாலும், அதனை அது பல மடங்கு பலனாக உனக்குத் திருப்பிக் கொடுக்கும்.

உதாரணமாக,

ஒரே ஒரு மாங்காய் அல்லது தேங்காய் விதையை மண்ணில் விதைத்து, சில காலங்கள் கழிந்து பார்த்தால், அதில் பல நூற்றுக்கணக்கான மாங்காய்களும், தேங்காய்களும் காய்த்திருப்பதை பலனாகக் காண்பாய்.

ஒன்றுக்கு பல மடங்கு பலன்கள் கிடைக்கின்றது.

இதுதான் இயற்கை உனக்குக் கொடுக்கும் கொடை.

அதுபோல, நீ செய்கின்ற ஒரே ஒரு செயல் நல்லதாக இருப்பின் சில காலங்களிலேயே உனக்கு அதன் பலனாக பல நல்ல செயல்கள் உன் வாழ்க்கையில் நடைபெறுவதையும், ஒரே ஒரு செயல் தீயதாக இருப்பின் அதன் பலனாக பல தீய செயல்கள் உன் வாழ்க்கையில் நடைபெறுவதையும் கண் கூடாக காணலாம்.

இதில் ஒரே ஒரு செயலுக்கே இப்படி என்றால், பல நல்ல செயல்களை அல்லது பல தீய செயல்களை செய்யும் பொழுது அதன் பலன்களாக நல்லதும், கெட்டதும் பல மடங்கு கிடைக்கும்.

இதுவே இயற்கையின் நியதி ஆகும்.

இதில், செய்கின்ற செயல் நல்லதா, அல்லது கெட்டதா என்பதை, அந்த செயலினால் கிடைத்த பலன்களை வைத்தே அது முடிவு செய்யப்படுகின்றது.

ஆக, நீ ஒரு செயலைச் செய்வதற்கு முன்பு அதன் பின்விளைவுகளையும், பலன்களையும் கருத்தில் கொண்டு செயல்பட்டால், அந்த செயல் நல்ல வகையில் பயன் கிடைத்து உன்னால் பெருமிதம் கொள்ளமுடியும்.

அதுவே, நீ செயல்படும் பொழுது, எதைப்பற்றியும் கவலைப்படாமல் அந்த செயலைச் செய்தால், அதன் விளைவாக கிடைக்கின்ற சிரமங்களையும் நீ அனுபவிக்கத் தயாராக இருக்க வேண்டும்.

**"முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்"**

இதிலிருந்து நீ செய்யும் செயலை மிகுந்த முன் எச்சரிக்கையுடன், உனக்கும், மற்றவர்களுக்கும் பாதிப்பு

ஏற்படாதவாறு மிகுந்த எச்சரிக்கையுடன் செயல் புரிய வேண்டும்.

அனைத்து உயிரினங்களும் செயல் செய்யத்தான் விளைகின்றன. ஆனால், எத்தகைய செயல் செய்வது, எத்தகைய செயல் செய்யக்கூடாது என்பதை அவைகள் அறியவில்லை.

காரணம் அவைகளுக்கு கொடுக்கப்பட்ட அறிவின் அடிப்படையிலேயே அவைகள் செயல்படுகின்றது.

உன்னைத்தவிர தவிர மற்ற உயிரினங்கள் அறிவால் குறைந்து காணப்பட்டாலும், தன்னுடைய உணவு, குடும்பம் மற்றும் உறைவிடம் தேவைக்காக செயல் புரிந்தாலும், இதில் தன் சுய தேவையை விட மற்ற உயிரினங்களுக்கு நன்மை அளிப்பதையே அவைகளின் பெரும்பாலான செயல்களில் காணமுடிகின்றன.

ஒவ்வொரு உயிரினமும் ஒன்றை ஒன்று சார்ந்து வாழ்கின்றன.

உதாரணமாக, செடி, கொடிகள், போன்றவை தன்னுடைய செயலால் பல உயிரினங்களுக்கு உணவாகவும், உயிர் காக்கும் மருந்தாகவும் பயன் படுகின்றன.

அதுபோல, மரங்களும் தன்னுடைய பங்கிற்கு உனக்கும் மற்ற உயிரினங்களுக்கும் தேவையான உணவாக பழங்களை தருகின்றன.

மேலும், உன்னையும், மற்ற உயிரனங்களையும் காப்பதற்கு உன்னாலேயே (தொழிற்சாலை, மோட்டார் வாகனப் புகை) மாசுபடுத்தப்படுகின்ற வளி மண்டலத்தை காப்பாற்ற கரியமில வாயுவை மரங்கள் எடுத்துக்கொண்டு நல்ல பிராண வாயுவை உனக்கு தங்கு தடையின்றி கிடைக்கச் செய்கின்றன.

இத்துடன் உன்னுடைய அத்தியாவசிய தேவையான உணவு, நீர் போன்றவைகளுக்கு காரணமான மழையை பொழிய வைக்கின்றன.

தேனீ, வண்டு போன்ற பூச்சி இனங்கள் தாவர இனப்பெருக்கத்திற்கு தேவையான மகரந்தச்சேர்க்கை நடைபெறவும், மேலும், மலர்கள், காய்கறிகள், பழங்கள் போன்ற உணவுத் தேவைக்கும் உதவி புரிகின்றன.

பறவைகள் பல விதமான தாவரங்களின் காய்கறிகளையும், பழங்களையும் உணவாக உட்கொண்டு, அதன் எச்சங்களாக அந்த தாவரத்தின் விதைகளை பூமியில் பரவச்செய்து, அந்த விதைகளினால் உண்டான புதிய விருட்சங்களினால்

மற்ற உயிரினங்கள் உயிர் வாழத் தேவையான மழை, காற்று மற்றும் உணவைக் கிடைக்கச் செய்கின்றன.

இதுபோல பல்வேறு ஜீவராசிகள் தனக்கென ஒரு நோக்கமுமின்றி, இந்த உலகத்தில் பலவிதமான நற்செயல்களைச் செய்கின்றன.

ஆனால், மனிதனாகிய நீ மட்டுமே இந்த பிரபஞ்சத்திற்கு நல்லது செய்யாமல், அதிகமான தீமைகளையே செய்கின்றாய்....?

காரணம் உன்னுடைய அதிக ஆசையும், உன்னைப்பற்றிய அறியாமையுமே ஆகும்.

## 10. பிறவிச் சுழற்சி

உன்னுடைய செயல்களின் பலன்களையும், மற்ற உயிரினங்களின் செயல்களினால் விளையும் அதன் நன்மை, தீமைகளையும் தீர்மானிக்கும் உரிமையை இறைவன் தன்வசம் வைத்துக்கொண்டுள்ளார்.

காரணம் அவரே கர்ம பல தாதா வாக இருக்கின்றார்.

மேலும், அவைகளினால் செய்யப்படும் செயல்களினால் ஏற்படும் நன்மை, தீமைக்கு உண்டான பலன்களையும் அவைகளுக்கு இந்த பிறவியில் கொடுப்பதும் இல்லை.

காரணம், அவைகள் உன்னைப் போன்று ஆறாவது அறிவான பகுத்தறியும் அறிவைப் பெற்றிருக்கவில்லை.

ஆனால், நீ செய்கின்ற செயல்களினால் விளையும், நன்மை மற்றும் தீமைகளுக்கு நீயே பொறுப்பு எடுத்துக்கொள்ள வேண்டும்.

காரணம், உன்னிடம் மற்ற உயிரினங்களுக்கு கிடைக்காத ஆறாவது அறிவு என்ற நல்லது, கெட்டதை பகுத்தறியும் பகுத்தறிவு இருப்பதால், உன்னுடைய ஒவ்வொரு செயல்களின் பலன்களுக்கு நீயே பொறுப்பேற்க வேண்டும் என்பதுதான் ஈஸ்வரனின் சட்டம்.

ஆக, இதிலிருந்து நீ செய்கின்ற ஒவ்வொரு செயலுக்கும், கிடைக்கின்ற பலன்களை நீயே அனுபவிக்க உரிமை உள்ளதால், நீ செய்கின்ற செயல்கள் நல்லதாக இருந்தால், அதன் பலனாக நீ நன்மையையும், கெட்டதாக இருந்தால், அதன் பலனாக நீ தீமையையும் அனுபவிக்க வேண்டும்.

நீ செய்கின்ற ஒவ்வொரு செயலும் ஈஸ்வரனின் சட்ட ஒழுங்குக்குள் வரும் செயல்களை “**புண்ணியச்செயல்**” என்றும், ஒழுங்கற்ற செயல்களை **“பாவச்செயல்”** என்றும் இரண்டாகப் பிரித்து, அதற்கு ஏற்ற பலன்களை அது பாவச்செயலா, அல்லது புண்ணியச்செயலா என பிரித்துப் பார்த்து, அந்தப் பலன்களை கர்மபல தாதாவாகிய அவன் முழுமையாக உனக்கு அனுபவிக்க கொடுப்பான்.

ஈஸ்வரன் அந்தப்பலன்களை மூன்று நிலைகளாக கணக்கு வைத்துக் கொண்டு, காலம் வரும் பொழுது, அதை உனக்கு பலனாக அனுபவித்து கழிக்க உடல் கொடுக்கின்றான்.

இவ்வாறு நீ பெற்ற பாவ, புண்ணிய பலன்களை அனுபவிக்க வேண்டிய இந்தப் பிறவியில் உன் ஆயுள் காலங்களுக்குள், இந்த உடலின் வாயிலாக அந்த பலன்களை முழுவதுமாக அனுபவிக்க முடியாமல் மரணத்தை தழுவினால், மீண்டும் உன் செயற்பலன்களுக்கு ஏற்ப, வேறு ஒரு உடலின் வாயிலாக மீண்டும் அந்த பலன்களை அனுபவிக்க மறுபிறவி கொடுக்க வேண்டும் என்ற நியதியில், மறுபடியும் உனக்கு பலன்களின் அடிப்படையில் மிருகம், பறவை, புழு, பூச்சி மற்றும் மனித உடல் கொடுத்து,

உன்னை அந்தப் பலன்களை அனுபவிக்கச் செய்து, அவைகளைத் தீர்க்க முயற்சி செய்ய வைக்கின்றான்.

இதில் இந்தப் பிறவியில் நீ செய்கின்ற தற்போதைய புதிய செயல்களின் பலன்களையும் சேர்த்து, கணக்கில் வைத்துக் கொள்ளப்படுகின்றது.

இதுபோல, பல பிறவிகளில் பல உடல்களை நீ எடுத்து உன்னுடைய கர்ம பலன்களை அனுபவித்து முடிக்க முடியாமல் நீ தவிக்கும் பொழுது, உன்னுடைய ஆறாவது அறிவின் அவசியத்தை உனக்கு உணர்த்தி உன்னை நீ அறியும் வரை, உன்னால் அந்த பலன்கள் அனைத்தையும் முழுவதுமாக தீர்க்கவே முடியாது என்ற பேருண்மையை உனக்கு சாஸ்திரத்தின் வாயிலாக உபதேசிக்கப்படுகின்றது.

இதில் நீ இதுவரை செய்த செயல்களினால், கிடைத்த பலன்களை அனுபவித்து தீர்ப்பது என்பது......... ?

நீ உன்னைப் பற்றியும், இறைவனைப் பற்றியும், மற்றும் இந்த ஜகத்தினைப் பற்றியும் உண்மை அறிவை அடையும் வரை...........

உன்னுடைய செயற் பலன்களை முழுவதுமாக தீர்க்கவோ, அல்லது உன்னால் இந்தப் பிறவிச்

சுழற்சியை நிறுத்தவோ முடியாது என்பதுதான் முற்றிலும் உண்மை.

இந்த பிறவிச் சுழற்சியிலிருந்து நாம் அறிய வேண்டிய உண்மை வெளிப்படுகின்றது. அதாவது, பல்வேறு உடற்கூறுகளுடன், பலதரப்பட்ட உயிரினங்கள் இந்த பிரபஞ்சத்தில் காணமுடிகின்றது.

ஈஸ்வரனின் படைப்பில் இந்த ஏற்றத்தாழ்வுகளை காணும் பொழுது, ஓரறிவு படைத்த உயிரினம் முதல் ஆறறிவு படைத்த உன்னுடைய பிறவி வரை, அனுபவிக்கும் பலன்களும் மாறுபடுகின்றது.

அனைத்து வகைகளிலும் சிறப்பாகச் செயல்படும் உன்னைப் படைத்த அதே இறைவன், உன்னை விட கீழான மற்ற உயிரினங்களை படைக்க வேண்டிய அவசியமும், அல்லது உன்னைவிட மிகவும் சந்தோஷமான சூழலில் வாழும் ஒருவனையும், அதிகத்துயரத்தை கொண்ட உடல் ஊனமுற்ற ஒருவனையும் படைக்கவேண்டிய அவசியமும் ஏன் என்று இப்பொழுது புரிகின்றது.

**இந்த வேற்றுமைக்கு காரணம் என்ன?**

இந்த வேற்றுமைகளுக்கு உண்டான உண்மைக் காரணத்தை சாஸ்திரம் வெளிப்படுத்துகின்றது.

அதுதான், அவனவன் செய்த செயல்களின் பலனுக்கு ஏற்ப, அந்த பலன்களை அவன் அனுபவிக்க, அவனுக்கு உடல் கொடுக்கப்படுகின்றது. அந்த உடல், இந்தப் பிறவியில், அவன் எந்த வகைப்பலன்களை அனுபவிக்க வேண்டும் என்பதைப் பொருத்து, உடல் தேர்ந்தெடுக்கப் படுகின்றது.

இந்தப் பிறவியில், நீ மனிதனாகப் பிறந்து, முற்பிறவிப் பலன்களை அனுபவித்துக் கொண்டிருக்கும் பொழுதே, இந்தப் பிறவியில் நீ செய்கின்ற புதிய செயல்களுக்கு உண்டான பலன்களையும், நீ மீண்டும் அனுபவிக்க வேண்டி, அடுத்தப் பிறவி என்று ஒன்றை, உன்னுடைய பலன்களின் அடிப்படையில், அதற்கேற்ற உடலாகக் கொடுத்தால்தான், அதை உன்னால் அனுபவித்து கழிக்க முடியும் என்பது நியதி.

இதில் உன்னுடைய கீழான பலன்களை அனுபவித்து தீர்க்க, கீழான மிருகங்கள் போன்ற பிறவி எடுத்து நீ தீர்க்க முயலவேண்டும். ஆனால், அந்த மிருகப் பிறவியில் நீ செய்யும் செயல்களின் பலன்களுக்கு பாவ, புண்ணியங்கள் கிடையாது என்பதினால், நீ முற்பிறவியில் செய்த பாவத்தை மட்டுமே கழிக்க, அந்த மிருகத்தின் உடலை பயன்படுத்தி முடித்துவிட்டு, மீண்டும் உன்னுடைய சேமிப்பில் மீதம் வைத்துள்ள,

பாவ புண்ணியங்களின் அடிப்படையில் உனக்கு மற்றொரு உடல் எடுக்க வேண்டிய நிர்பந்தம் உண்டாகின்றது.

உதாரணமாக, ஒரு குவித்து வைக்கப்பட்ட நெற்குவியலில் இருந்து சிறிது நெல்கள் எடுத்து விதைக்கப்பட்டு, இவ்வாறு விதைக்கப்பட்ட நெல்களானது மீண்டும் முளைத்து அதிகப்படியான பல நெல்மணிகளை கொடுக்கும். இந்த அதிகப்படியான நெல்மணிகளை மீண்டும் அந்த பெரிய நெல்குவியலுடன் சேர்த்து கொட்டி விடுவார்கள். பிறகு அதிலிருந்து சிறிது விதை நெல்லை எடுத்து மீண்டும் விதைப்பார்கள். இதுபோன்று உனக்கு பல பிறவிகள் மீண்டும், மீண்டும் உண்டாகின்றது.

ஈஸ்வரனின் படைப்பில் ஓரறிவு உடல்கள் (புல், செடி, கொடி) முதல் கொண்டு, ஆறறிவு உடல் (மனித இனம்) வரை மொத்தம் 84 இலட்சம் பிறவிக்கான உடல் வகைகள் உள்ளன.

கர்மங்களால் கட்டுண்ட நீ இவற்றுள் ஏதேனும் ஒரு உடலில் உன்னுடைய வினைகளை தீர்த்தாக வேண்டும்.

**"உறங்குவது போலும் சாக்காடுறங்கி விழிப்பது போலும் பிறப்பு." - திருக்குறள்.**

அதாவது, உறங்கி எழுவது போல மனிதன் இறப்பிற்கு பின் உயிர்தெழுகிறான் அதாவது பிறப்பு எடுக்கிறான் என்கிறார்.

இவ்வாறு பிறவிச் சுழற்சியில் மாட்டிக்கொண்டு நீ பிறப்பதும், இறப்பதுமாக சிக்கித்தவிப்பதை தவிற்க வேண்டும் என்று, தன்னைப் பற்றிய முழுமையான ஞானத்தை அடைந்த தத்துவ ஞானிகள் உபதேசிக்கின்றார்கள்.

## 11. செயல் பலன்கள்

நாம் செய்யும் செயல்களுக்கான விதை, நம் எண்ணங்களில் இருந்து தோன்றுகின்றன.

எப்படி?

எந்தக் காரியங்களை, '**இதை நான் செய்கிறேன்**' என்ற தன்னுடைய செயலாக நினைத்து, செய்கின்றோமோ, அந்தக் காரியங்களுக்கான பலன்கள் நம் கணக்கில் சேர்கின்றன.

எந்தக் காரியங்கள், 'இதை நான் செய்கிறேன்' என்ற எண்ணமின்றி செய்யப்படுகின்றனவோ, அந்தக் காரியங்களுக்கான பலன்கள் நம் கணக்கில் சேர்வதில்லை.

நமக்குள் முதலில், **'நான் இருக்கிறேன்'** என்ற அகந்தையும், **'இது என்னுடையது'** என்ற மமதையும் உதிக்கின்றன.

மனம், சித்தத்தில் பதிவாகியுள்ள வாசனைகளின் ஆதிக்கத்தால், கடந்தகால, நிகழ்கால நிகழ்வுகளை அசைபோடுகின்றது. புத்தி சித்தத்தின் உதவியுடன், இதைச் செய்யலாம், இதைத் தள்ளலாம், என முடிவெடுக்கின்றது. புத்தியின் தீர்மானம் மனதுக்கு அறிவிக்கப்படுகின்றது. மனம், சுயமாக முடிவெடுத்து இந்திரியங்களைத் தூண்ட, நாம் உடலால் செயல்களை செய்கின்றோம்.

அந்தச் செயல்களின் உடனடி பலனை இந்திரியங்கள் வழி மனமும், இந்திரியங்கள் மற்றும் மனதின் வழி புத்தியும் கிரஹித்து, இது சுகம், இது துக்கம் என்று நமக்கு தெரிவிக்கின்றன.

இவை யாவும், க்ஷண நேரத்தில், இந்த வரிகளை படிக்கும் நேரத்தில், நூற்றில் ஒரு பங்கு நேரத்தில் நிகழ்ந்து விடுகின்றன.

இதைச் செய்யலாமா, செய்யக்கூடாதா என்பதை புத்தி தீர்மானிக்கலாம்.

ஆனாலும், புத்தியின் ஆராய்ச்சிக்கு ஆதாரம் சித்தமே. சித்தம் சேர்த்து வைக்கப்பட்டுள்ள செய்திகளின் அடிப்படையிலேயே புத்தி ஆராயும். அதே போல, இதைச் செய்யலாம், இதைச் செய்யக்கூடாது என புத்தி முடிவு சொல்லிய பின்னும், மனம் தன் போக்கில் அந்தக் காரியத்தைச் செய்வதோ, செய்யாமல் விடுவதோ நிகழ்கின்றது.

எண்ணத்தால், '**இந்த காரியத்திற்கு நான் கர்த்தா**' என்று நம்மை நாமே ஒரு காரியத்தோடு இணைத்துக் கொள்கிறோம்.

அது, நல்ல காரியங்களானாலும் சரி, தீய காரியங்களானாலும் சரி. அந்தக் காரியத்தின் பலன்கள் நம் கணக்கில் சேர்கின்றன.

தொடர்ந்த மனப்பயிற்சிகள், அப்பியாசங்கள், சாஸ்திர ஞானம், குரு உபதேசம் ஆகியன, ஒரு காரியத்தில் பற்று அறுத்து ஈடுபட உதவும் சாதனங்கள். நாம்

செய்யும் காரியங்களைச் சாஸ்திரங்கள் வகுத்திருப்பதைக் காணலாம்.

நாம் இருக்கும் நிலையிலிருந்து, நம்மை உயர்ந்த நிலைகளுக்கு எழுப்பிச் செல்லும் காரியங்கள், 'ஆப்ய கர்மம்', என்று அழைக்கப்படுகின்றன.

நாம் இருக்கும் காலத்திலிருந்து, முன்பாகவோ, பின்பாகவோ நம்மை அழைத்துச் செல்லும் காரியங்கள், **'உத்பாத்ய கர்மம்'**, என்று அழைக்கப்படுகின்றன.

ஒன்றிலிருந்து வேறொன்றாக மாற்றும் அல்லது மாற உதவும் காரியங்கள், **'வைகர்ய கர்மம்',** அல்லது, **'வைபரீத்ய கர்மம்'**, என்று அழைக்கப்படுகின்றன.

மனதையும், அதாவது சித்தத்தையும், உடலையும் சுத்திகரிக்கும் காரியங்கள், **'ஸம்ஸ்கார கர்மம்'**, என்று அழைக்கப்படுகின்றன.

நாம், தினம்தோறும் அல்லது ஒரு குறிப்பிட்ட கால அவகாசத்துக்கு ஒருமுறை, மீண்டும் மீண்டும் செய்யும் காரியங்கள், **'நித்ய கர்மம்'** என்று அழைக்கப்படுகின்றன.

விசேஷ காலங்களில், ஆற்றப்படும் காரியங்கள், 'நைமித்திக கர்மம்', என்று அழைக்கப்படுகின்றன.

உலகவியல் பலனை எதிர்பார்த்து, (அந்தப் பலன், இந்த உலகத்தில் அனுபவிக்கக் கூடியதாய் இருந்தாலும், வேறொரு உலகத்தில் அனுபவிக்கக் கூடியதாய் இருந்தாலும்), செய்யப்படும் காரியங்கள், '**காம்ய கர்மம்**', என்று அழைக்கப்படுகின்றன.

உலகவியல் பலனை எதிர்பாராது செய்யப்படும் காரியங்கள், '**நிஷ்காம்ய கர்மம்**', என்று அழைக்கப்படுகின்றன.

தவிர்க்கப்பட வேண்டிய காரியங்கள், '**நிஷித்த கர்மம்**', என்று அழைக்கப்படுகின்றன.

இவை மட்டுமல்ல, நாம் தன்முயற்சியுடன், மனதாலும், வாக்காலும், உடலாலும் செய்யும் எல்லா செயல்களுமே கர்மங்கள் தான்.

இந்தச் செயல்கள், காரியங்கள் யாவுமே, ஏதோ ஒரு காரணத்துக்காக, பலன்களை எதிர்பார்த்துச் செய்யப்படுகின்றன.

இவை, இந்தப் பிறவியிலேயே நாம் எதிர்பார்த்த பலனைத் தரலாம். அல்லது தராதும் போகலாம். ஆனால், இந்தச் செயல்களை, நாம் ஒரு கருவி போல் அல்லாது, ஒரு கர்த்தாவாக செய்திருப்போமேயானால்,

இவற்றுக்கான பலன்கள் உருவாகின்றன, நம் கணக்கில் சேர்கின்றன.

இவை விதைகள் போல, அவ்யக்தமாக, நம்முள் தங்கி விடுகின்றன. சமயம் வரும் போது, பலனைத் தருவதற்காக, வியக்தமாகின்றன அல்லது, விளைந்து பலனைத் தருகின்றன.

அவை அவ்வாறு விளையும் போது, நாம் செய்யும் செயல்கள், நாம் அந்தப் பலன்களை அனுபவிப்பதற்கான வழிமுறையாகவே இருக்கின்றன. இந்த சூக்ஷமம் புரியாததால், எதிர்பாராத நன்மை விளையும் போது அதை அதிருஷ்டம் என்றும், தீமை விளையும் போது துரதிருஷ்டம் என்றும், நாம் விளக்கம் சொல்லிக் கொள்கின்றோம்.

உன்னுடைய ஆசைகளின் உந்துதலினால், மனம் போனபடி செயல்படுகின்ற நீ, அந்த செயலின் நன்மை, தீமைகளை ஆராயாமல் செய்யும், ஒவ்வொரு செயலுக்கும், பலன் அளிப்பதற்காக, உன்னுடைய செயல்களை கீழே கொடுக்கப்பட்டது போன்று, சேமித்த செயல்பலன், செயல்படுகின்ற செயல்பலன், மற்றும் இனி வர இருக்கின்ற செயல் பலன் என மூன்று வகைகளில் உன்னுடைய செயல் பலன்கள் உள்ளது.

இதில் இந்த மூன்று செயல் பிரிவுகளும் உனக்கு எப்படி பலன் அளிக்கின்றது என்பதை இனிப் பார்க்கலாம்.

1. **சேமித்த செயல்பலன்கள்**

**-----------------------------------------------**

ஆக, 'நான் கர்த்தா', என்ற எண்ணத்துடன், நாம் செய்யும் நல்வினைகள், தீவினைகள் யாவும், அவற்றுக்கான பலன்களை உருவாக்கிக் கொண்டே இருக்கின்றன.

அவை, நம் கணக்கில் சேர்ந்து கொண்டே இருக்கின்றன.

உன்னுடைய பல்வேறு முற்பிறவிகளில் செய்த செயல்களின் மொத்த கர்மாக்களின் தொகுப்பை உன்னால் முழுமையாக அனுபவித்து தீர்க்க வேண்டும்.

நாம் நம் உடலை விட்டவுடன், இந்தச் சேமிப்பு என்னவாகிறது?

இதே போல், முன்னால் நாம் எடுத்த பிறவிகளில் நாம் சேமித்த இருப்பு இருக்குமே, அதனுடன் சேர்ந்து கொள்கிறது.

இவ்வாறு, நீ பல பிறவிகளில் செய்த பாவ புண்ணியங்களை மொத்தமாக சேமித்து வைத்துக்கொண்டுள்ள உன்னுடைய செயல் பலன்களையே “சேமித்த செயல்பலன்” அல்லது “சஞ்சித கர்மா” என்று அழைக்கின்றோம்.

**“சஞ்சிதம்”** என்றால், **'சேர்த்து வைக்கப்பட்ட தொகுப்பு'** என்று பொருள் கொள்ளலாம்.

## 2. செயல்படுகின்ற செயல்பலன்கள்

----------------------------------------------------------------

உன்னுடைய பல்வேறு முற்பிறவிகளில் மொத்தமாக நீ சேமித்த செயற்பலன்களிலிருந்து, இப்பொழுது வந்த இந்தப் பிறவிக்கு, அவைகளில் இருந்து சிறிது பாவ, புண்ணியங்களை எடுத்துக் கொண்டு வந்து, தற்பொழுது அனுபவித்தாலன்றி தீராதவை.

ஒவ்வொரு பிறவிக்கும், நாம் செலவழிப்பதற்காக நம்முடைய சேமிக்கப்பட்ட பலன்களிலிருந்து இப்பிறவிக்கு வரும்பொழுது உடன் கொண்டு

வருகிறோம். பிறவி முழுவதும் அந்த பலன்களான, சுகங்களையும், துக்கங்களையும் அனுபவிக்கிறோம்.

இந்த மனிதப் பிறவிக்குக் காரணமானவை சென்ற பிறவிகளில் செய்யப்பட்டவை. இந்தப் பிறவியில் நிகழும் சுக துக்கங்களுக்குக் ஆதாரமாய் இருப்பவை, அனுபவித்து தீர்க்க, நாம் உத்தேசித்து, உடன் கொண்டு வந்திருக்கும் இந்தக் கர்மங்களை செயல்படுகின்ற செயல்பலன்கள் அல்லது 'பிராரப்த கர்மம்' என்று அழைக்கின்றோம்.

**'பிர ஆரப்த'** என்றால், **'பலன் தர, வேளை வந்துவிட்ட'** என்று பொருள் கொள்ளலாம்.

இங்கு, என்ன நீ புரிந்து கொள்ள வேண்டும் என்றால், உன்னுடைய பாவ, புண்ணியத்தின் அடிப்படையிலேயே நீ இன்று வாழும் வாழ்க்கை ஆகும். இது உன்னுடைய பிராரப்த கர்மாவின் வெளிப்பாடே அன்றி, உன்னால் அதை எந்த வித மாற்றத்திற்கும் உட்படுத்த முடியாது.

உதாரணமாக, அதிகப் பாவப் பலன்களையும், குறைவான புண்ணியப் பலன்களையும், பலன்களாக ஒருவன் இந்தப் பிறவியில் கொண்டு வந்தால், அவனது வாழ்க்கை, மிகுந்த துயரத்துடனும், அதிகமான போராட்டத்துடனும் காணப்படும்.

அவன் இந்தப் பிறவியில் என்ன நல்லது செய்தாலும், அவைகள், இனி வர இருக்கின்ற செயல்பலன்களில் சேர்ந்துக்கொண்டு, அவன் கொண்டுவந்த செயல்படுகின்ற செயல்பலன்கள் படியே நடைமுறைப்படுத்தும். அதனால்தான் அவன் இந்தப் பிறவியில் நல்லவனாக இருந்தும் துயரப்படுகின்றான்.

இதுபோல, அதிகப் புண்ணியப் பலன்களையும், குறைவான பாவப் பலன்களையும், பலன்களாக ஒருவன் இந்தப் பிறவியில் கொண்டு வந்தால், அவனது வாழ்க்கை, மிகுந்த சந்தோஷத்துடனும், அதிகமான உற்சாகத்துடனும் காணப்படும்.

அவன் இந்தப் பிறவியில் என்ன கெட்டது செய்தாலும், அவைகள், இனி வர இருக்கின்ற செயல்பலன்களில் சேர்ந்துக்கொண்டு, அவன் கொண்டு வந்த செயல்படுகின்ற செயல்பலன்கள் படியே நடைமுறைப்படுத்தும். அதனால்தான் அவன் இந்தப் பிறவியில் கெட்டவனாக இருந்தும் சந்தோஷமாக இருக்கிறான்.

## 3. வர இருக்கின்ற செயல்பலன்கள்

------------------------------------------------------------

இந்தப் பிறவியில் நாம் பல்வேறு காரியங்களைச் செய்கிறோம். பல காரியங்களுக்கு நாம் தூண்டுதலாக இருக்கிறோம். பல காரியங்களுக்கு நாம் துணையாகவும் இருக்கிறோம். இந்தக் காரியங்கள், நம்மால், நம் மனம், வாக்கு, மற்றும் உடலால் செய்யப்படுகின்றன.

இந்த எல்லாக் காரியங்களும் அவற்றின் பிரதிபலிப்பாக, பலன்கள் உருவாகிக் கொண்டே இருக்கின்றன.

அவ்வாறு, நாம் இந்தப் பிறவியில் செய்யும் செயல்களின் பலனாக, நாம் சேர்த்துக் கொள்ளும் கர்மங்களின் தொகுப்பே, வர இருக்கின்ற செயல்பலன்கள் அல்லது **'ஆகாமிய கர்மம்'** எனப்படும்.

**'ஆகாம்ய'** என்றால், **'பின்னர் பலன் தரக் கூடிய'** என்று பொருள் கொள்ளலாம்.

இந்த ஆகாமிய கர்மா பகுத்தறிவு அற்ற உயிரினங்களுக்கு கிடையாது.

அவைகள் பூமிக்கு வருவதே தன் வசம் மீதம் வைத்துள்ள உள்ள பாவ, புண்ணிய பலன்களை கழிப்பதற்காக மட்டுமே. அவைகள் சேமித்த செயல்பலன்களிலிருந்து மீதியையும் கழிக்க மீண்டும் இன்னொரு உடல் எடுக்க வேண்டியது வரும்.

இப்படி, ஏற்கனவே எடுத்த மனித உடல்களின் வாயிலாக, சேகரிக்கப்பட்ட சேமித்த செயல்பலன்கள் கையிருப்பு இருந்தும், புதியதாக இந்தப் பிறவியில் சேகரித்த, வர இருக்கின்ற செயல்பலன்களையும் சேர்த்துக் கொண்டால், சேமித்த செயல்பலன்களின் அளவு கூடிக் கொண்டே போகும். அதாவது, சஞ்சித கர்மா கூடிக்கொண்டே போகும்.

இங்கு நீ என்ன புரிந்து கொள்ள வேண்டும் என்றால், மொத்த பாவ, புண்ணியங்களின் தொகுப்பான சஞ்சித கர்மாவையோ, அல்லது இந்தப் பிறவியில் கொண்டு வந்து அனுபவித்துக்கொண்டு இருக்கின்ற பிராரப்த கர்மாவையோ உன்னால் ஒன்றும் செய்ய முடியாது.

ஆனால், இந்தப் பிறவியில் நீ செய்யும் ஆகாமிய கர்மா உன் வசத்தில் உள்ளது. நீ நினைத்தால், அதனை உன்னுடைய விருப்பத்தின் படி அமைத்துக்கொள்ளலாம்.

இது ஒன்றே நீ மனிதப்பிறவி எடுத்ததின் மிக, மிக சிறப்பான விஷயம் ஆகும்.

இது மற்ற எந்த பிறவிகளுக்கும் கிடைக்காது.

அதனால்தான் "அரிது அரிது மானிடராகப் பிறத்தல் அரிது" என்றனர் சான்றோர்கள்.

ஆகவே, நீ இந்த மனிதப் பிறவியை சரியாக வாழ்ந்தால் மட்டுமே இந்த பிறவிப்பெருங்கடலை நீந்தி கரை சேர முடியும். இல்லையென்றால், இறைவனடி சேர முடியாமல், மீண்டும், மீண்டும் இந்தப்பிறவிச் சுழற்சியில் சுழன்றுக் கொண்டே இருக்கவேண்டும்.

## 12. மீண்டும் பிறப்பற்ற வழி

இவ்வாறு பிறவிச் சுழற்சியில் சுழன்று நீ உன்னுடைய கர்ம பலன்களைக் கழிக்க பல பிறவிகளுக்கான உடலை இறைவன் உனக்கு கொடுத்தாலும், அந்த உடல் இயங்கத் தேவையான சூட்சுமப் பொருளாக, அவனே ஒவ்வொரு உடலின் உள்ளே ஆத்மாவாக நின்று இயங்குகின்றான்.

எவ்வாறு பரமா(ஆ)த்மா மனித உடலுக்குள் நுழைந்தார் என்றால், அவர் உச்சியைப் பிளந்து கொண்டு, அந்த வாசல் வழியாக உள்ளே நுழைந்தார் என்றும், அந்த வாசலின் பெயர் **“வித்ருதி”** என்றும் சாஸ்திரம் விளக்குகின்றது.

அது ஆனந்தத்தின் உறைவிடம்.

உடம்பு - உயிர்த் தொகுதியான ஜடப்பொருளில் “அது” என்று அழைக்கப்படுகின்ற இறைவனாகிய உணர்வுப் பொருள் சேரும் போது மட்டுமே உடல் வாழ்க்கை நடைபெறும்.

உன்னுடைய உடம்பினுள் உச்சந்தலை வழியாக அவர் உள்ளே நுழைந்தார் என்று **தைத்ரீய உபநிஷதம்** கூறுகிறது.

உன்னுடைய உடம்பு 11 வாசல்களை உடைய நகரம் (புரம் ஏகாதச த்வாரம்) என்கிறது கட உபநிஷதம்.

2 கண்கள், 2 காதுகள், 2 நாசித் துவாரங்கள், வாய், தொப்புள், குறி, குதம் மற்றும் உச்சந்தலையிலுள்ள பிரம்ம ரந்திரம் ஆகியவையே அந்த 11 வாசல்கள்.

**தஹர வித்யா அல்லது தகர வித்தை** என்பது நம்முள்ளே ஒரு வெளி (தஹரம், ஆகாயம், (Space)-அகவெளி உள்ளது. அதில் எழுந்தருளியிருக்கும் இறைவனை தியானத்தின் மூலம் தேடுவதும், அடைவதுமே தஹர வித்யா அல்லது **தஹராகாச வித்தை** எனப்படும். இந்த தஹர வித்தை சாந்தோக்கிய உபநிடதத்தின் எட்டாம் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது.

மார்பின் உள்ளே ஒரு வெளி '**தாமரை மொட்டுப் போன்ற இதயம்**' நாற்புறங்களிலும் நாடிகளால் சூழப்பட்டு தொங்குகிறது. அதன் உள்ளே நுண்ணிய ஆகாசம் உள்ளது. அனைத்தும் அதில் நிலை பெற்றுள்ளன.

இந்த இதய வெளிக்குள்ளே உள்ள பொருளைத் தேட வேண்டும், அறிய வேண்டும். அதற்கான தியானப் பயிற்சியை (வித்யை) செய்ய வேண்டும். இவ்வித்தையை பயில "**பிரம்மச்சர்ய விரதம்**" அவசியம்.

இந்த வெளி உலகில் என்னென்ன சாதிக்க வேண்டும் என நினைக்கின்றமோ அவையனைத்தையும் உன்னுடைய அகவெளியில் உறையும் இறைவனைத்

“**தஹர வித்யா**” மூலம் தியானிப்பதன் மூலம் அடைய இயலும்.

தஹர வித்யா எனும் இறை தியானத்தை செய்பவன் உலக இன்பங்களை இறைவனின் வாயிலாக மட்டுமே அனுபவிக்க இயலும் என்பதையும், இவ் வித்யாவின் மூலம் என்ன நினைத்தாலும் அது நடக்கும் என்பதை விளக்கப்படுகிறது.

அகவெளியில் இறைவனை தியானிப்பவன் பித்ரு லோகத்தை விரும்பினால் இறந்த முன்னோர்களான தந்தை, தாய், சகோதர சகோதரிகள் மற்றும் நண்பர்கள் அவன் முன் தோன்றி மகிழ்விப்பார்கள். மேலும் இவ் வித்தையின் மூலம் அவன் விரும்பும் அனைத்துப் பொருட்களையும் அடைந்து மகிழ்வான்.

பஞ்சபூதங்களின் அம்சமான உடல் - மனம், இறைவனின் அம்சமான ஆன்மா ஆகிய இரண்டின் சேர்க்கையே மனிதனாகிய நீ ஆவாய். உன்னை நீ அறிவதின் காரணமாக மட்டுமே உடல் மனச்சேர்க்கையிலிருந்து விடுபட்டு, இறைவனை அடைந்து, உன்னுடைய சொந்த இயல்பாகிய ஆன்மாவாக நிலைபெறுகின்றாய்.

அழியக்கூடிய உடல் - மனம் மற்றும் அழிவற்றதான ஜீவாத்மா ஆகிய இரண்டையும் கட்டுப்படுத்துபவர் இறைவன். தூக்கத்தில் நம் உடலிருந்து பிரிகின்ற மனம் ஜீவாத்மாவில் ஒடுங்குகிறது. ஜீவாத்மா பரமாத்மாவில் ஒடுங்குகிறது. இந்த உண்மையை உணர்பவன் தினந்தோறும் இறையுலகத்திற்குச் சென்று, இறைவனிடம் ஒன்றுகலப்பதை உணர்கிறான்.

தஹர வித்யாவின் மூலம் இறையுலகம், இறைக்காட்சி அல்லது இறையனுபூதியின் விளக்கமும் கூறப்படுகிறது. அதை அடைவதற்கான அடிப்படை தகுதியானது பிரம்மச்சர்யம் ஒன்று மட்டுமே.

இறையுலககிற்கு செல்வது யார், எப்போது, எவ்வாறு செல்வர் போன்ற கேள்விகளுக்கு தஹர வித்யையின் இப்பகுதி விளக்குகிறது.

சூரியனே இறையுலகின் வாசல் என்று,. ஓங்கார மந்திரத்தை அறிந்து கொண்டு தியானித்தவர்கள் இந்த வாசலில் அனுமதிக்கப்படுகிறார்கள். மற்றவர்கள் மறுக்கப்படுகிறார்கள்.

இதயத்தின் நாடிகள் நூற்றொன்று. அவற்றுள் ஒன்று உச்சந்தலையைப் பிளந்து செல்கிறது. அதன் வழியாக மேலே செல்பவன் மரணமற்ற நிலையை அடைகிறான்.

மற்ற நாடிகளின் வழியாக வெளியேறுபவன் பல்வேறு கீழ் உலகங்களில் உழல்கிறான் என்கிறது கட உபநிஷதம்.

இதயத்திலிருந்து நூற்றொரு நாடிகள் புறப்படுகின்றன. இவற்றின் மூலமே கட்டளைகள் இடப்படுகின்றன. அனுபவங்கள் பெறப்படுகின்றன.

நாடிகள் சாதாரண கண்களுக்குப் புலனாகாதவை. பிரார்த்தனை, தெய்வீக வாழ்க்கை போன்றவை மூலம் தூய்மையும் ஆற்றலும் வாய்ந்த மனத்தினால் மட்டுமே அறியத்தக்கவை.

உச்சந்தலையிலுள்ள பிரம்ம ரந்திரத்தின் வழியாக ஒரு நாடி செல்கிறது. இதன் வழியாக உயிரை விடுபவன் மரணமற்ற நிலையை அடைகிறான். அதாவது, “**பிறவாமை**” என்ற பெரு நிலையை அடைகின்றான்.

மற்ற நூறு நாடிகளும் மீதி பத்து வாசல்களுள் ஏதாவது ஒன்றில் நிலைபெறுகின்றன. இவற்றின் வழியாக உயிர் வெளியேறினால் மீண்டும் பிறவி உண்டாகிறது.

ஆசையற்ற யோகியால் மட்டுமே பிரம்மரந்திரத்தின் வழியாக உயிரை வெளியேற்ற முடியும் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

## 13. ஆசைகள்

இங்கு ஆசை என்பது ஒரு பொருளை அடைய அல்லது அனுபவத்தை அடைவதற்கான ஏக்கம் எனலாம். இந்த ஏக்கமானது நித்ய வஸ்துவான இறைவன் மீது உண்டாகாமல், அனித்ய வஸ்துக்களான இந்த அழியக்கூடிய உலகியல் பொருட்களின் மீது உண்டாவதால் அது பேராசையாகவும் மாறிவிடுகின்றது.

**“அவாஎன்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும் தவாஅப் பிறப்பீனும் வித்து”. - குறள்.**

எல்லா உயிர்களுக்கும், எந்தக் காலத்திலும் அழியாமல் வரும் பிறப்பை உண்டாக்கும் விதைதான் ஆசை என்று பெரியோர்கள் கூறுவர்.

ஆகவே, நீ தாமரை இலையில் என்றுமே ஒட்டாத தண்ணீர் போல் இருக்கவேண்டும்.

அது எப்படி சாத்தியமென்றால், நீ எந்த ஒரு செயலையும் செய்யும் போதும் விழிப்புணர்வுடன் கவனித்தால் ஆசை ஒட்டாமல் இருக்கும்.

ஆசைகள் இரண்டு வகைகள் உள்ளன. அவைகள் உயர்ந்த மற்றும் தாழ்ந்த ஆசைகள் ஆகும்.

**“உயர்ந்த ஆசைகள்"** என்பதை எப்படி வரையறுக்க முடியும்?

உயர்ந்த யோகி புலன் இன்பங்களின் மீது, பற்று (ஆசை) வைக்க மாட்டான்.

உன்னுடைய புலன் இன்பங்கள், உன்னுடைய மனதுடன் தொடர்பு உடையவை. மனதை கட்டுப்படுத்த முடியாதவனே, புலன் இன்பங்களின் மீது ஆசை வைக்கின்றான்.

உன்னுடைய ஐம்புலன்களை மகிழ்ச்சி படுத்தும் செயல்கள் என்பது பார்த்தல், கேட்டல், ருசித்தல், நுகர்தல் மற்றும் தொடுஇன்பம் ஆகியவைகள்.

இவைகளைப் பொறுத்தே உன்னுடைய ஆசைகள் தாழ்ந்தவைகள் என்று கூறப்படுகின்றது. இந்த புலன் இன்ப ஆசைகள், எத்தகைய விளைவை ஏற்படுத்தும் என்றால், நீ,சதா உலக விசயங்களை யோசித்து கொண்டு இருக்கும் பொழுது அதன் மீது பற்று உண்டாகின்றது.

அந்த பற்றினால் ஆசை (காம:) உண்டாகின்றது. ஆசையினால் கோபம் உண்டாகின்றது. கோபத்தால் மனக்குழப்பம் ஏற்படுகின்றது. மனக்குழப்பத்தால் நீ பெற்ற "புத்தி" யில் நாசம் உண்டாகின்றது.

புத்திநாசம் (அறிவு அகன்ற நிலை) ஏற்பட்டவனுக்கு நன்மை என்பது ஏது?

எனவே, நீ, அக ஆராய்ச்சியில் நிலை கொண்டு விட்டால், உலக விஷயங்களுக்காக பெரிதாக அலட்டி கொள்ள வேண்டியதில்லை.

மேலும், நீ உன் ஆத்ம சுகம் ஒன்றையே உயர்வாகக் கருதினால் மற்ற சுகங்கள் உனக்கு பெரிதாகத் தோன்றாது.

ஆசை (காமம்) என்பது ஞானிகளின் பரம எதிரி என்று கூறப்படுகிறது. மேலும் இந்த ஆசை (காமம்) மூன்று குணங்களை உடையது.

அவைகள் :

**“நெருப்பிற்குச் சமமானது", "விரும்பிய வடிவை பெற வல்லது" மற்றும் "ஒருபோதும் திருப்தியடையாதது.** அதாவது என்றுமே முழுமை அடையாதது".

அதுபோல, ஆசைக்கு மூன்று இருப்பிடங்கள் உள்ளன.

**"புலன்கள், மனம், புத்தி"** இந்த மூன்றும் தான் ஆசையின் இருப்பிடங்கள்.

மேலும் ஆசையானது "மனம், புத்தி மற்றும் இந்திரியங்கள் (புலன்கள்)" ஆகியவற்றை ஆட்கொண்டு, ஞானம் எனும் பேரறிவை மறைத்து நிற்கின்றது.

முதலில் நெருப்பினைப் போன்றது என்பதன் மூலம், அது அழிக்கும் தன்மையை பெற்று இருக்கிறது என கூறப்படுகிறது.

மேலும் நெருப்பு நன்றாக எரிவதற்கு பொருட்கள் கொடுக்கப்படும் வரையில் அது மேலோங்கி வளர்ந்து கொண்டே தான் இருக்கும்.

அது போல, ஆசையிடம், அது விரும்பும் பொருட்களை எவ்வளவு கொடுத்தாலும், அது இன்னும் வளர்ந்து கொண்டே தான் இருக்கும்.

இரண்டாவதாக, ஆசை விரும்பிய வடிவை (காமரூபேண) பெற வல்லது.

முதலில் "பொருளாசை" எனில், அதை அடக்கி விட்டாலும், "பெண்ணாசை", "புகழாசை", மற்றும் பதவி

ஆசை என பல புதிய வடிவங்களில் ஆசைகள் வந்து உன்னை ஆட்கொள்ளும்.

எனவே, ஆசைக்கு விரும்பிய வடிவம் பெறும் குணம் உள்ளது.

மூன்றாவதாக, ஆசை ஒரு போதும் திருப்தி அடையாதது என கூறப்படுகிறது.

ஒருவன், சிப்பாயாக இருந்து, தளபதியாக வேண்டும் என்று ஆசைக்கொண்டு, அவன் தளபதியாக ஆகும் போது, மன்னனாக வேண்டும் என்று புதிய ஆசை உண்டாகும், அதாவது திருப்தி அடையாமல் அடுத்த நிலை நோக்கிய ஆசை புகுந்து விடுகிறது.

இவ்வாறு ஆசையின் குணங்கள் உள்ளன.

மேலும் ஆசை, எங்கு குடி கொண்டு இருக்கிறது என்றால், அது "புலன்கள்", "மனம்", "புத்தி" என்ற மூன்றின் மீதும் குடி கொண்டு இருக்கிறது.

புலன்கள் என்பது நம் உடலின் அங்கங்கள்.

மனம் என்பது புலன்களை விட நுண்ணியது. ஆனால், சக்தி வாய்ந்தது.

புத்தி என்பது மனதை விட நுண்ணியது மற்றும் அதை விட சக்தி வாய்ந்தது.

எனவே, நீ எடுத்த எடுப்பில் சிகரத்தை தொட்டு விடுவதை முயற்சிப்பதை விட, படிப் படியாக முயற்சி செய்வது சிறந்தது.

முதலில் நீ புலன்களை அடக்கி அதன் மூலம் மனம் மற்றும் புத்தி என்ற இரண்டையும் அடக்கலாம்.

எவ்வாறு, புகை சூழ்ந்து இருக்கும் நெருப்பினை உன்னால் காண முடியாதோ, அது போல, ஆசை சூழ்ந்து இருக்கும் ஞானத்தை உன்னால் காண முடியாது.

ஆசைகள், உண்மையில் எதிர்பார்ப்புகளை தூண்டி விடுகிறது. எதிர்பார்ப்புகள் நிறைவேறாத போது, கோபம் வருகிறது. பின் அதன் வழியாக அனைத்து கெட்ட எண்ணங்களும், உன்னுள் நுழைய ஆரம்பிக்கின்றன.

உலகெல்லாம் ஒளி விடும் சூரியனை, உன்னுடைய கையாலோ, பிற பொருட்களாலோ மறைக்க நினைப்பதை விட, உன் கண்களை மட்டும் மூடிக் கொள்வது புத்திசாலித்தனம் அல்லவா. அது போல, ஆசைகள் அனைத்தையும் நிறைவேற்றி விட துடிப்பதை விட, ஆசைகளையே அடக்குவது தான் மிகவும் சிறந்தது.

உன் வாழ்நாளில் எப்படியாவது ஒரு சைக்கிள் மட்டும் வாங்கி விட்டால் போதும் என்ற உன்னுடைய ஆசை, அடுத்து மோட்டார் சைக்கிள், கார் என அடுத்த கட்டத்தை நோக்கி பயணிக்கிறது. உண்மையில் உனக்கு மோட்டார் சைக்கிள் அல்லது கார்களுக்கான தேவை இல்லாவிடினும் அவற்றை அடைய நினைக்கும் ஆசையில், நீ, உன்னை துன்பத்திற்கு ஆட்படுத்திக் கொள்கின்றாய்.

இவ்வாறு தேவைக்கு மேல் உள்ள ஆசைகளின் பிடியில் சிக்கியபின் வாழ்க்கையில் துன்பம் அற்று வாழ்வதற்கு எவ்வாறு உன்னால் இயலும்?.

எனவே,

எல்லா உயிர்களும் துன்பத்தை உள்ளடக்கியவை.

எல்லா துன்பங்களும், ஆசைகளில் இருந்து உண்டானவை.

எல்லா துன்பங்களும், ஆசைகளை அகற்றும்போது முடிகின்றன.

அதனால் எல்லா துன்பங்களுக்கும் முடிவு காண ஒரே வழி தேவையற்ற ஆசைகளை விடுவதே ஆகும்.

உண்மையில் ஆசைகளை, உனக்காக மட்டுமே உருவாக்கி கொள்வதில்லை. அவைகள் உன்னிடமிருந்து உன் பரம்பரைகள், அல்லது உன்னைச் சார்ந்தவர்கள் என எல்லோரிடமும் விதைத்து கொண்டும் தான் இருக்கின்றாய். இதுவே உன்னுடைய பெரும் துன்பத்திற்கு காரணமாக அமைகின்றது.

எனவே, அழியக்கூடிய சாதரணமான பொருள் மீது பற்றை விட்டு, விட்டு என்றுமே அழியாத "பரம்பொருள் மீது பற்று வை. அப்படி செய்தால், அழியக்கூடிய இந்த நிலையற்ற பொருள்களின் மீது ஆசை வராது" என்கின்றனர்.

**"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு". - திருக்குறள்.**

அதாவது, நீ இறைவனை விரும்பினால், மற்ற விருப்பங்கள் உன்னை விட்டு தானே நீங்கி விடும் என்கின்றது.

## 14. பக்தி

இவ்வாறு, நீ இறைவனின் தெய்வீக சொரூபத்தினிடத்திலும், ஆத்ம குருவினிடத்திலும் செலுத்துகின்ற அபரிமிதமான அன்பிற்கு “**பக்தி**” என்று பொருள்.

அன்பு செலுத்தாமல் யாரும் ஆத்மாவை அறிய முடியாது. அன்பே சிவம் என்று அறியாதவற்கு ஆத்மஞானம் வராது.

அதுபோல, அன்பு இல்லாமல் பக்தி இல்லை, பக்தி இல்லாமல் கர்மம் இல்லை, கர்மம் இல்லாமல் யோகம் இல்லை, யோகம் இல்லாமல் உடல், மனம் ஆரோக்கியம் இல்லை, ஆரோக்கியம் இல்லாமல் அறிவு இல்லை, அறிவு இல்லாமல் ஞானம் கிடையாது. ஞானம் இல்லாமல் அந்த பரமா(ஆ)த்மனை அறிய முடியாது.

எனவே, யோகங்கள் அனைத்தையும் சார்ந்துதான் உன் ஆன்மீக வளர்ச்சி உள்ளது. உன்னுடைய ஆன்மீக வளர்ச்சியின் புரிதலில்தான் உன்னுடைய ஆத்ம ஞானம் இருக்கின்றது.

சாஸ்திரம் படித்தவர்களும், ஞானம் உடையவர்களும் மட்டுமே இறைவனை அணுக முடியும் என்பது இறைக் கொள்கையாக இருந்தால், இறைவன் என்பவன் சாதாரணமான பாமரனால் அணுக முடியாதவனாகிவிடுவான்.

இறைவனிடம் நிலையாக காட்டப்படும் உயர்ந்த அன்பே "பக்தி" எனப்படும். அன்பின் அடிப்படையில் அமையும் பக்தியின் ஆழத்தை எந்தவகையிலும் பிரித்து அறிய முடியாது.

**"ஊமை மனிதன் இனிப்பைச் சுவைத்து உணரும் அனுபவம் போன்றது பக்தி"**

என நாரத பக்தி சூத்திரம் பக்திக்கு விளக்கம் தருகிறது.

சாதாரண மனிதனிடத்தில், ஒழுங்கையும், தூய்மையையும் ஏற்படுத்த பக்தியினால் மட்டுமே முடியும்.

"அங்கோலா விதை அதன் அடிமரத்தைச் சுற்றி இருப்பது போல, காந்தம் இரும்பை ஈர்ப்பது போல, கடலில் சேரும் நதியைப் போல இறைவனின் திருவடியை நோக்கி சதா மனம் செல்வதுதான் "**பக்தி**" என '**சிவானந்தலஹரி**' அனைவருக்கும் புரியும் வகையில் அறிய உவமைகளைக் கூறுகின்றது.

பாகவத புராணம் பக்தியில்லாத மனிதனை விலங்குடன் ஒப்பிட்டு கூறுகிறது.

பாலைவனத்து முட்செடியை உண்ணும் ஒட்டகம் அதன் வாயில் குத்தி ரத்தம் வந்தாலும் அதை மிகப்பிரியமாகத் தின்கின்றது. அதுபோல, மனிதன் துன்பங்களில் முடியக்கூடிய விஷய சுகங்களை மட்டுமே இன்பமாக ஏற்று அனுபவிக்கின்றான்.

ஒரு நாயைப் போல அவமானங்களை தாங்கிக்கொண்டு வாழவே விரும்புகிறான். கழுதை போல குடும்ப கஷ்டங்களை சுமக்கின்றான்.

இதுபோன்ற தேவையற்ற விஷய சுகங்களில் அதிக ஆர்வம் செலுத்தும் மனிதன் பகவான் மீது பக்தி செலுத்த மறுக்கின்றான்.

ஒவ்வொரு மனிதர்களும் தங்களது கடமை, தவம், கர்மபலன், உயர்ந்த சிந்தனை, லட்சியம், எல்லாம் ஆத்மாவை அறிகின்றதற்காகவே அமைத்துக்கொள்ள வேண்டும். அந்த ஆத்மாவை அறியும் அறிவு உயர்ந்த பக்தியினால் மிக சுலபமாக உண்டாகின்றது.

அறம், பொருள், இன்பம், வீடுபேறு அடைய பக்தி மிகவும் அவசியமாகின்றது.

பக்தியின் பொருள் பல இடங்களில் பல சூழலில் வேறு வேறு விதமாக மாறுவதும் உண்டு. பக்தி என்றால் விசுவாசம், பயம் கலந்த பணிவு, சிரத்தையின் வெளிப்பாடு, அல்லது தன்னைவிட மேல்நிலையில் இருப்பவரிடம் செலுத்தப்படும் மரியாதை என்று பல அர்த்தங்களை கூறலாம்.

ஆனால், நாரத பக்தி சூத்திரத்தில் நாரதர் குறிப்பிடுவது, அன்பின் எல்லையே பக்தி, அது இறைவனிடம் மட்டுமே செலுத்தக்கூடிய பக்தி என்கின்றார்.

ஆசை, சுயநலம் இல்லாத அந்த தூய பக்தி இறைவனிடம் மட்டும் உருவாகி விட்டால், அது இந்த உலகத்தில் எந்த பொருளையும், சுகத்தையும் சார்ந்து இருக்காது. புண்ணியங்களால் கிடைக்கும் பரலோக இன்பங்களையும், மோட்சபதவியையும் கூட விரும்பாத அந்த பக்தியை, “**அனன்ய பக்தி**” என்று கூறுகின்றனர்.

ஒளி வாங்கிக் கண்ணாடி ஒளியை வேறுபக்கம் சிதறடிக்காமல், ஒரே இடத்தில் குவிக்கின்ற பொழுது, அதனால் அந்த ஒளிக்கு ஆற்றல் அதிகமாகி அங்கு ஒரு தீயை உண்டாக்க முடியும். அதுபோல, பகவான் மீது உண்மையான பக்தி கொண்ட பக்தன் வேறு இடத்திற்கு மனம் போகாமல், சதா அந்த பகவானிடத்திலேயே தன் மனத்தைக் குவித்தான் என்றால், அவன் எத்தகைய

துன்பத்தையும் தாங்கும் ஆற்றல் உள்ளவனாகின்றான். இதையே "**அனன்ய பக்தி**" என்கின்றனர்.

அனன்ய பக்தி என்பது, நீ எனக்கு எத்தனை இன்னல்களை கொடுத்தாலும், சோதித்தாலும் நெருப்பிலிட்ட தங்கம் போல நான் மின்னுவேன் என்ற மனப்பக்குவதுடன் இருப்பதே ஆகும்.

ஆழ்வார்களும் நாயன்மார்களும் எவ்வளவோ கஷ்டங்களை சந்தித்தார்கள் இருந்தும் இறைவன் மீது மாறாத பக்தி கொண்டிருந்தார்கள்.

மனதில் இறைவனிடம் அன்பு பெருக்கு ஏற்பட்டு பக்தி உருவாகி விட்டால், மற்ற சுகங்களை அடையும் ஆசை வரவே வராது.

மேல்நிலை பக்தியில் திளைத்தவர்கள் சீக்கிரமே பகவானின் அன்பில் கலந்து விடுவார்கள். பகவத் கீதையில் இதை "ஞானியின் பக்தி" என்றும் "**நிர்குணபக்தி**" என்றும் காரணமில்லா பக்தி என்றும் கூறப்பட்டுள்ளது.

இந்த காரணமில்லா பக்தியில் பக்தனின் சித்தமும், செயல்பாடுகளும் இடைவிடாமல் தன்னிச்சையாக பகவானை நோக்கி பிரவாகமாக ஓடும். சித்தம் அனன்ய,

பிரேம பாவம் கொண்டு பகவானை விட்டு விலகாமல் இருக்கும்.

இறைவன் மீது பக்தி செலுத்துபவர்களில் சிலர் தாழ்ந்த நிலை பக்தியும் கொள்கின்றனர். கோவிலுக்குச் செல்லும் சில பக்தர்கள், இறைவனை வணங்கி தனக்கு அது வேண்டும், இது வேண்டும் என்று கோரிக்கை வைத்து வழிபடுவார்கள். இவர்கள் தங்கள் கோரிக்கையை நிறைவேற்ற இறைவனுக்கே லஞ்சம் கொடுக்கவும் தயங்கமாட்டார்கள்.

இவர்கள், தனக்கு புகழ் வேண்டும், நோயின்றி சுகமாக வாழவேண்டும், அளவற்ற செல்வம் வேண்டும், பகைவர்களை வெல்ல வேண்டும் என வேண்டிக்கொள்வார்கள்.

இதுவும் பக்தியின் ஒரு நிலைப்பாடுதான், இருப்பினும் இவர்கள் கோரிக்கை நிறைவேறாமல் போனால் இவர்களுக்கு பக்தியில் முன்பு போல தீவிரம் இருக்காது அல்லது இறைவனின் மீது கோபம் வரும். அதாவது, ஒன்றின்மீது விருப்பம் கொண்டு, அதனை நிறைவேற்றி வைக்க இறைவனிடம் கையேந்தும் பக்தி. இந்த பக்தியை “**பிரேமை பக்தி**” என்கின்றனர்.

உலகியலில் காணப்படுகின்ற பதவி, பற்று, ஐஸ்வர்யம், சௌந்தர்யம், பலம், புகழ், ஞானம், வைராக்யம் ஆகியவை சுக வாழ்விற்கும், தியாகத்திற்கும் தேவைப்படுபவை என நினைத்து, அனைவரும் அவைகளை நோக்கி விரும்பி ஓடுகின்றார்கள். அதற்காக இறைவனையும் துணையாக பயன்படுத்திக் கொள்ள விரும்புகின்றார்கள்.

சிலர், இறைவனுக்கு சேவை செய்கின்றேன் என்ற வேஷத்தில் இறைவனை வைத்தே தன் வயிற்றுப் பிழைப்பிற்காக சில தவறான செயல்களையும் செய்கின்றனர். இவர்கள் தன்னலம் மட்டுமே விரும்புவார்கள். மற்றவர்களின் நலம் விரும்பிகளாக ஒரு போதும் இருக்க மாட்டார்கள். ஆனால், நல்லவர்கள் போல் நடிப்பார்கள். இவர்களிடம் இறைவனின் அருள் வேண்டும் என்ற ஆசையை விட பொருள் வேண்டும் என்ற ஆசை மிக அதிகமாக இருக்கும். இவர்களை அடையாளம் கண்டு நீ ஒதுங்க வேண்டும். இல்லையேல், உன்னுடைய ஆன்மீக முன்னேற்றம் பாதிக்கப்படும்.

இன்னும் சிலர், மூட பழக்கவழக்கங்களை சடங்குகளாகவும், சம்பிரதாயங்களாகவும் வைத்துக்கொண்டு பக்தி என்று நினைத்து இறைவனை

வழிபாடு செய்கின்றனர். இவர்கள் உண்மையில் பக்தி என்பதை அறியாதவர்கள். ஆனால், மற்றவர்கள் செய்கின்றனர் எனவே, நானும் செய்கின்றேன் என்பது போன்ற குருட்டு பக்தியை கொண்டுள்ளனர்.

இவர்கள் அனைவருமே இறைவனிடம் எதையாவது அது வேண்டும், இது வேண்டும் என்று கையேந்திக் கொண்டுதான் இருப்பார்களே தவிர இறைவனையே நீதான் வேண்டும் என்றுஒரு நாளும் வேண்டமாட்டார்கள்.

கௌணி பக்தி என்பது முக்குணங்களை கொண்டது. அதாவது **சாத்வீகம்**, **ராஜசம்**, **தாமசம்**, ஆகிய மூன்று குண பேதங்களுடன் இருக்கிறது.

அனைத்து கர்மபலன்களும் பகவானுக்கே அர்ப்பணம் செய்து எதற்கும் ஆசைபடாமல் பகவானை ஆசையுடன் வழிபட்டு வருவது "**சாத்வீகபக்தி**" எனப்படும்.

ஆசைகளை அடிப்படையாக கொண்டு, உலகில் பெயருடன் புகழுடன் வாழ வேண்டும். ஐஸ்வர்யங்கள் பெற்று வசதியாக, சுகமாக வாழ வேண்டும் என்று ஆராதனை செய்வது (அதாவது இதில் விக்ரஹ ஆராதனையும் கோவில் வழிபாடும் இருக்கும்) கோவிலை கட்டி, பிறர் புகழ வேண்டும்

என்பதற்காக போலியான பக்தி பஜனை செய்வது, அல்லது கோவிலில் விளக்கு போட்டு உபயம் என்று எழுதி வைப்பது, அல்லது கோவிலுக்கு தேவையான பொருள் உதவி செய்யும் போதும் பண உதவி செய்யும் போதும், தன் பெயரை பொறிக்கசெய்து உபயம் என்று எழுதி வைப்பது, இதுவே "**ராஜச பக்தி**" எனப்படுகிறது.

பிறருக்கு கஷ்டத்தை கொடுத்து, இம்சித்து பக்தி, பஜனை எல்லாம் செய்வது "**தாமசபக்தி**" என்பதாகும்.

இந்த வரிசையில் உயிர் பலி கொடுத்து, இம்சித்து, பூஜைகளை நடத்துவதும் தாமச பக்தியை சேர்ந்தது. பிறருடன் போட்டி போட்டுக்கொண்டு வழிபாடு செய்வதும், ஆடம்பரமாக செலவு செய்து விழா எடுப்பதும், பொருட்களை கோவிலுக்கு தானமாக தந்ததை பெருமையாக பேசிக்கொள்வதும் தாமச பக்தியை சேர்ந்தவை.

கௌணீ பக்தர்கள் முறையாக பகவானை உபாசிப்பதில்லை என்றாலும், இவர்கள் நிச்சயம் பகவானை நெருங்க முயற்சி செய்கிறார்கள். படிப்படியாக இவர்களும் அகத்தூய்மை பெற்று நிச்சயம் பகவானை அடைவார்கள்.

## 15. பக்தர்களின் வகைகள்

அடுத்து, வேறுவிதமாக மூன்று வகை பக்தர்கள் இருக்கிறார்கள். அவர்களைப் பற்றி பகவத் கீதை கூறுகின்றது.

ஆர்த்த பக்தன், அர்த்தார்த்தீ பக்தன், ஜிக் ஞாஸு பக்தன், ஆகிய மூன்று வகை பக்தர்கள் தனி தனி இயல்பு உடையவர்கள்.

**ஆர்தபக்தன்:**

ஆபத்து, வியாதி போன்ற தன் கஷ்டங்களையும் பாவங்களையும் அழிக்க வேண்டும் என்ற ஒரே லட்சியத்துடன் பகவானை தொழுது பஜனை செய்வது கோவில் திருப்பணிகளை செய்வது ஆகிய வழிகளால் இறைவனை ஆராதிப்பவன் "**ஆர்தபக்தன்**" ஆகின்றான்.

**அர்த்தார்த்தீ பக்தன்:**

இவன் புராண காலத்து அசுரர்கள் போல தவமிருந்து நாம ஜபம், தியானம் செய்து வரங்களை கேட்பான். மென்மையான வாழ்வு, பெயர், புகழ், செல்வம் எல்லாம் பகவானிடம் விரும்புவான்.

உலகத்தின் நிலையில்லா, அற்ப சுகங்களுக்கும், சந்தோசங்களுக்கும், பகவானிடம் கையேந்துவது எப்படி இருக்கிறதென்றால், பொன்னும், பொருளும், ரத்தினங்களும் வழங்கும் பெரும் செல்வந்தனிடம் போய் எனக்குத் தவிடு கொடு என்று கேட்பது போல உள்ளது.

உண்மையில் செல்வத்தினுள் பெரும் செல்வம் இறைவன் அல்லவா? அந்த செல்வத்தை அடைந்த பின் வேறு எந்த செல்வம் பெரிதானது? அல்லது வேறு செல்வதை எதற்காக விரும்ப வேண்டும்?

**ஜிக்ஞாஸு பக்தன்:**

பகவான் என்றால் அவருடைய ஆற்றல் என்ன ? பகவானை தத்துவார்த்தமாக எப்படி அறிய முடியும் எங்கும் நிறைந்த ஈசன் எப்படி அருள் பாலிக்கிறார்? என்று பகவானை பற்றி நன்கு அறிய விரும்பும் வேட்கை கொண்டவன் தன் அரிய சாத்வீக பக்தியால் உபாசனை செய்து நெருங்குகிறவன் "**ஜிக்ஞாஸு பக்தன்**" ஆகின்றான்.

முக்குண பக்திகளில் **சாத்வீக பக்தியே** சிறந்ததாக முதலிடம் பெறுகிறது.

அதுபோல ஆர்த்த பக்தி, அர்த்தார்த்த பக்தி, ஜிக்ஞாஸு பக்தி ஆகியவற்றில் **ஜிக்ஞாஸு பக்தியே** சிறந்ததாக முதலிடம் பெறுகிறது.

இறைவனை அடைய வேண்டிய மற்ற வழிகளை விட பக்தியோக வழியே சுலபமானது. கர்ம, ஞான, தியான யோகங்கள், அனுஷ்டானம் செய்வதற்கு கடினமானவை.

பக்தியோகத்தின் பலனோ எந்த பாதிப்புமின்றி கிடைத்து விடும்.

பக்தர்கள் உலகியல் விசயங்களின் லாப நஷ்டங்களை பற்றி கவலைப்பட வேண்டியதில்லை. ஏனெனில் சிந்தை எல்லாம் இறைவனே நிறைந்து இருக்கும் போது அங்கு வேறு விசயங்களுக்கு இடமேது?

பகவான் காந்தம் போல தன்னில் இழுத்து ஆட்கொண்டுவிட்டால், ஈசனான பகவானின் பக்திக்கு வசமாகிவிட்டால், அவன் அமிர்த கடலில் மூழ்கி விடுவான். அதன் பின் குட்டையில் தேங்கிய நீரை நோக்கி போக மாட்டான்.

“எவன் எல்லா உயிரினங்களிலும் வெறுப்பு இல்லாதவனோ, தன்னலம் இல்லாமல் எல்லோரிடமும் அன்பு கொண்டவனோ, காரணமின்றி இரக்கம் காட்டுபவனோ, நான், என்னுடையது என்ற

ஆணவமற்றவனோ, இன்ப, துன்பங்கள் நேரும்போது நிலைமாறாது சமமாக இருப்பவனோ, பொறுக்கும் இயல்புடையவனோ அதாவது குற்றம் செய்தவனுக்கும் அபயம் அளிப்பவனோ, யோகியோ, எப்பொழுதும் எல்லாவிதங்களிலும் திருப்தி உள்ளவனோ, மனம் மற்றும் புலன்களோடு கூடிய உடலைத் தன்வசப் படுத்தியவனோ, மேலும் என் மீது திடமான நம்பிக்கை உடையவனோ, என்னிடத்தில் மனம், புத்தி இவற்றை அர்ப்பணம் செய்தவனோ, என்னுடைய அந்த பக்தன் எனக்குப் பிரியமானவன்" என்று கீதையில் பகவான் கிருஷ்ணர் கூறுகின்றார்.

மனம், வாக்கு, தேகம் இவை மூன்றையும் பூஜை செய்யும் கருவிகளாக பிரயோகிக்கவேண்டும். பகவானின் விக்ரஹத்திற்கு பூஜை செய்ய வேண்டும். அல்லது பகவானை விசுவாத்மாவாக அதாவது, எங்கும் நிறைந்தவனாக நினைத்து, அனைத்து உயிர்களிலும் உறைபவன் என்பதால், அனைத்து உயிர்களையும் நேசிக்க வேண்டும். இப்படிப்பட்ட பக்தன் முற்றிலும் பகையைத் துறந்து விடுவான். ஆசைகளுக்கு அடிமையாக மாட்டான்.

தன்னுள் இருக்கும் ஆத்மாவை உணர்வதும், அதற்கு சாதகமான விசயங்களில் அன்பு செலுத்துவதும் தான்

உண்மையான பக்தி என்று சாண்டில்ய மகரிஷி கூறுகிறார்.

சகல உயிர்களுக்கும் இறைவன் ஆத்மாவாக வீற்று இருக்கிறார். அந்த சர்வாத்மா மீது அன்பு செலுத்துவது தான் பக்தி. அந்த பக்தி குடி கொண்டு விட்டால் முக்தி நிச்சயம் கிடைக்கும் என்று சங்கராச்சாரியார் கூறுகிறார்.

“எவனிடமிருந்து எந்த ஜீவனும் பாதிப்பு அடைவதில்லையோ, எவன் எந்த ஜீவன் மூலமும் பாதிப்படைய மாட்டானோ, மேலும் எவனொருவன் மகிழ்ச்சி, பொறாமை, பயம், பாதிப்பு முதலியவற்றிலிருந்து விடுபட்டவனோ, அந்த பக்தன் எனக்குப் பிரியமானவன்” என்று பகவான் கிருஷ்ணர் கூறுகின்றார்.

பிறவியெடுத்து தேகத்தால் செய்யப்படும் செயல்கள் அனைத்தும் பகவானுக்காகவே இருக்கும். அவனுக்கே அர்ப்பணம் செய்யப்பட்டிருக்கும். தன் நாயகன் போல இருக்கும் பகவானை நினையாத ஒவ்வொரு நொடியும் வீணானதே என்று வருந்துவதே உண்மையான பக்தி.

பகவானை பூஜை செய்வது, அவர் குணங்களை பாடுவது, சர்வாத்மாவாக இருக்கும் பகவானிடம் அன்பு

செலுத்துவது எல்லாமே பக்தியின் லக்ஷணங்கள் என்று அனைவரும் ஒப்புக்கொண்ட விஷயம்.

ஆச்சாரியார்களின் கருத்தை மேலும் வலுப்படுத்தும் விதமாக நாரதர் கூறுகிறார்

.உடல், ஆத்மா, பொருள் எல்லாம் அவனுக்கே அர்ப்பணம் செய்துவிட்டு, அவனை நினைத்துக் கொண்டு கர்மங்கள் செய்யவேண்டும். எந்த சந்தர்பத்திலும் மனம் அவனை விட்டு நீங்காதிருக்க வேண்டும்.

“எவன் ஒருவன் எதையும் எதிர்பார்க்காதவனாகவும், அகத்தூய்மையும் புறத்தூய்மையும் உள்ளவனாகவும், பிறவிப்பயனை அறிந்தவனாகவும், பட்ச பாதமற்றவனாகவும், துக்கங்களிலிருந்து விடுதலை பெற்றவனாகவும், செயல்கள் அனைத்திலும் ‘நான் செய்கிறேன்’ என்னும் அபிமானத்தை நீக்கியவனாகவும் உள்ள அந்த என் பக்தன் எனக்குப் பிரியமானவன்” என பகவான் கிருஷ்ணர் கீதையில் வலியுறுத்துகின்றார்.

உலகியலில் ஒரு பெண்ணோ, ஆணோ ஒருவர் மீது ஒருவர் அன்பு காட்டினால், அதன் பின்னால் பல விசயங்கள் ஒளிந்து இருக்கும்.

எந்த அன்பும் பலனை எதிர்பாராமல் உருவாகாது. பெண் ஒரு ஆணை காதலித்தால், அவன் தன்னை ஆதரிக்க

வேண்டும். தன் ஆசைகளை நிறைவேற்றி வைக்க வேண்டும். வாழ்நாள் எல்லாம், தமக்கு துணையாக பாதுகாப்பாக இருக்க வேண்டும் என்று பல பலன்களை எதிர்பார்ப்பாள்.

அது போல ஆணும், அவனுக்கு தகுந்த பல லாபங்களை எதிர்பார்ப்பான். இது போல உலகியல் காதலுக்கு முற்றிலும் எதிரானது, இறைவன் மீது செலுத்தப்படும் பக்தி அல்லது பிரியம். அதையே கோபிகை பெண்கள் செய்தார்கள்.

ஸ்ரீ கிருஷ்ணனால் அவர்களுக்கு ஆகவேண்டியது எதுவும் இல்லை. அந்த தூய பிரேமை பக்திக்கு உலகியல் காதல் ஈடாகாது. அவர்களுக்கு ஸ்ரீ கிருஷ்ணனை நினைத்தாலே பரவச நிலை ஏற்பட்டது. அந்த பரவசநிலை யோகிகளுக்கு மட்டும் கிடைக்க கூடியது. கோபிகை பெண்கள் மோட்சத்தையும் விரும்பவில்லை. கிருஷ்ணனையே தங்கள் இலட்சியமாக கொண்டு வாழ்ந்தனர்.

பாகவத புராணத்தில் கோபியர்க்கும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் இடையே நடந்த சம்பாஷனை அனைவரும் அறியக்கூடிய ஓர் உண்மையை வெளிப்படுத்துகிறது.

**கோபிகை பெண்கள் கேட்கிறார்கள்:**

கிருஷ்ணா, உலகில் சில பேர் அன்பு செலுத்தினால் மட்டுமே பதிலுக்கு அன்பு செலுத்துகிறார்கள். சிலர் அன்பு செலுத்தாவிட்டாலும் கூட மற்றவர்களை நேசிப்பவர்களாக இருக்கிறார்கள். சிலர், இருவரில் எவருமே தங்களது அன்பை பரிமாறிக் கொள்வதில்லை. இந்த மூன்று இரகமானவர்களில் யாருடைய அன்பை உயர்வாக எண்ணுகிறாய்?

**ஸ்ரீகிருஷ்ணன் பதிலுரைக்கிறார்:**

பிரிய சகிகளே, ஒருவர் அன்பை காட்டினால் தான் மற்றவர் அன்பாக இருப்பது என்பது சுய நலத்தின் அடிப்படையில் உருவாகிறது.

அது ஒன்றை கொடுத்து, ஒன்றை வாங்குவது போல வியாபாரமாகிறது. அதில் உள்ளார்ந்த நட்பும் இருக்காது. தர்மமும் இருக்காது. அந்த அன்பு நிலைத்தும் இருக்காது. ஏனெனில் காரியம் முடிந்தவுடன் அவர்கள் விலகிச்செல்வார்கள்.

இரண்டாவது இரகத்தினர் அன்பு செலுத்தாமல் இருந்தும் அன்பாக இருப்பார்கள். சான்றோர், குரு, தாய், தந்தை

போன்றவர்கள். இவர்கள் சுபாவத்திலேயே பாசமுள்ளவர்கள் இதயத்தில் அன்பு சுரந்து கொண்டே இருக்கும்.

மற்றவர்கள் அன்பு செலுத்தாவிட்டாலும் கூட, அவர்கள் நன்மைக்காக பாடுபடுபவர்கள். மகான்கள் அல்லது உண்மையான நண்பர்களும் இவ்வாறு இருக்கலாம். இவர்களின் அன்பில் சத்தியமும் தர்மமும் இருக்கும்.

மூன்றாவதாக எவ்வளவு அன்பு செலுத்தினாலும் அன்புடன் இருக்க மாட்டார்கள். முற்றும் துறந்த யோகிகளுக்கு அன்பும் கருணையும் கூட தடையாக இருக்கும். அவர்கள் இறைவனை அனைத்துயிர்களிலும் காண்பார்கள். அவர்கள் அன்பு, பாசம் ஆகிய வலையில் விழாமல் பற்றற்று இருப்பார்கள். இவர்களும், யோக சாதனையில் ஈடுபட்ட சாதகர்களும், எவரிடமும் எதையும் விரும்பாமல் பற்று என்ற அன்பை பிறரிடம் காட்ட மாட்டார்கள்.

வேறொரு இரகத்தினர் புத்தி சுவாதீனம் இல்லாதவர்கள். தம்மிடம் யார் அன்பு செலுத்துகிறார்கள் என்பதை அறிய மாட்டார்கள்.

மற்றொரு இரகத்தினர் உபகாரம் செய்து தன்மீது அன்பு கொண்டவர்களிடமும் பிரியமாக இருக்க மாட்டார்கள்.

இவர்கள் கல் நெஞ்சக்காரர்கள். அல்லது துரோகிகள். நெஞ்சில் பகை வளர்த்துக்கொண்ட பகையாளிகள் அல்லது திருடர்களாகவும், தீயவர்களாகவும் இருப்பார்கள்.

கோபியர்களே, மேற்சொன்ன எல்லாவித அன்பும் என்னில் பொருந்தாது. இறைவன் உயிர்களிடம் செலுத்தும் அன்பு என்ற அருள் ஒப்பற்றது. அதற்கு எதுவும் ஈடாகாது.

இறைவன் அருள் எங்கும் ஒரே மாதிரி தான் பொழிகிறது. இறைவன் அருளை பெறுவதற்காக, பக்குவப்படுவதற்காக, வைரம் போல பக்தர்கள் பட்டை தீட்டப்படுகிறார்கள்.

இதில் நீ எத்தகைய அன்பை வெளிப்படுத்திகின்றாய் என்பதில் இருக்கின்றது உன்னுடைய உண்மையான பக்தி.

பக்தி செய்ய எந்த தகுதியும் வேண்டியதில்லை. இறைவனின் மீது உண்மையான அன்பு மட்டும் இருந்தால் போதும்.

உதாரணமாக, வால்மீகி முனிவர் ஒரு கொள்ளைக்காரனாக இருந்தார். கண்ணப்பநாயனார் ஒரு வேடுவனாக இருந்தார்.

இவர்கள் செய்த பக்தி, தவம் செய்த முனிவர்களையும் மிஞ்சக்கூடியது. துளசிதாசர் செய்த ராம பக்தியை விட, ராம நாமத்தை விட சிறந்தது எதுவும் இல்லை.

பக்தி செய்ய எதுவும் தேவை இல்லை. தூய்மையான அன்புடன் ஒரு பூவை சாற்றினால் போதும், அல்லது தனக்கு கிடைத்த உணவை படைத்தாலே போதும், பிரார்த்தனை செய்தாலே போதும்.

இறைவன் மீது நம்பிக்கையுடன் கூடிய தளராத பக்தி செலுத்துவதால், ஒரு சீவன் வாழும் பொழுதே ஜீவன் முக்தியும் (மன நிறைவு), ஜீவனின் உடல் அழிந்த பின் விதேகமுக்தி அடைந்து, ஜீவாத்மாவும், பரமாத்மாவும் ஒன்றே என்பதே பக்தி யோகத்தின் பலனாகும்.

இதை எளிய தமிழில் நம்முடைய தமிழ்ப் பாட்டியாகிய ஔவையார் கூறுகின்றார்.

**பெரியது பெரியது புவனம் பெரியது,**
**புவனமோ நான்முகன் படைப்பு,**
**நான்முகனோ கரியமால் உந்தியில் வந்தோன்,**
**கரியமாலோ அலைகடல் துயின்றோன்,**
**அலைகடல், குறுமுனி அங்கையில் அடக்கம்,**
**குறுமுனியோ கலசத்தில் பிறந்தோன்,**

**கலசமோ புவியில் சிறு மண்**
**புவியோ அரவினுக்கு ஒருதலைப் பாரம்,**
**அரவோ உமையவள் சிறுவிரல் மோதிரம்,**
**உமையோ இறைவர் பாகத்து ஒடுக்கம்,**
**இறைவரோ தொண்டர் உள்ளத்து ஒடுக்கம்,**
**தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே!**

நீ பார்க்கும் இந்த உலகம் பெரியது. அது உண்மைதான். ஆனால், அந்தப் பெரிய உலகத்தையே படைத்தவர் பிரம்மா.

அப்படியானால், அவர் உலகத்தைவிடப் பெரியவராகத்தான் இருக்க வேண்டும் அல்லவா?.

ஆனால், அந்த பிரம்மா திருமாலின் தொப்புளில் தோன்றியவர்.

அப்படியானால் திருமால்தான் மிகப் பெரியவரோ?

என்றால், அப்படியில்லை, அந்தத் திருமால் துயில் கொண்டுள்ள அத்தனை பெரிய கடல் கூட அகத்திய முனிவரின் உள்ளங்கையில் அடங்கிவிட்டதே!

அப்படிப்பட்ட அகத்தியரோ சிறிய குடத்தில் பிறந்தவர். அதனால், அவரைக் ‘**கும்பமுனி**’ என்று சொல்கின்றோம்.

அகத்தியரை உருவாக்கிய குடம்தான் அனைத்தையும் விட மிகப் பெரியதா? என்றால், இல்லை அந்தக் குடம் மண்ணினால் செய்யப்பட்டதுதானே? அந்த மண்ணோ பூமி ஆகும்.

அந்தப் பூமியை ஆதிசேஷன் எனும் பாம்பு தன்னுடைய ஒரு தலையில் தாங்கியிருக்கிறது.

ஆக, பூமியைவிட ஆதிசேஷன் பெரியவர் என்று பார்த்தால், அந்த ஆதிசேஷனைப் பார்வதி தேவி தன் விரலில் மோதிரமாக அணிந்துள்ளார்.

ஆக, பார்வதி தேவியோ எல்லாரையும் விட பெரியவர் என்று நினைத்தால், பார்வதி தேவியோ சிவபெருமானுக்குள் ஒரு பாதிதானே?

அப்படியானால் பாரவதியையே தன்னில் பாதியாக கொண்ட சிவன்தான் பெரியவரோ என்றால்? அந்தச் சிவனோ உன்னுடைய உள்ளத்தில் பரமா(ஆ)த்மாவாக இருக்கின்றார்.

எனவே, மிகச் சுருக்கமாகச் சொன்னால், இந்தப் பிரபஞ்சத்திலேயே மிகப் பெரியது எது? என்றால்,

உன்னைப்போன்ற உண்மையைப் புரிந்து கொண்டு தன்னை அறிந்த பக்தர்கள் மட்டும்தான்.

‘**அப்படிப்பட்ட பக்தர்களின் பெருமையை முழுவதுமாகச் சொல்வதற்குத் தமிழில் வார்த்தைகளே இல்லை**’ என்று நெகிழ்கிறார் ஔவையார்!

அப்படிப்பட்ட உண்மையான பக்தன், பக்தியின் உச்சத்திற்கு போன பின், தன்னையும் தன் கடமைகளையும் கூட மறந்து விடுகின்றான்.

உலகியல் கடமைகளையும், வேத சாஸ்திரங்களை பின்பற்றி வாழும் முறைகளையும் அவன் அர்ப்பணம் செய்து விடுகின்றான். மற்ற சிந்தனைகள் அவனை விட்டு தாமாகவே சென்று விடுகின்றன.

தன்னையே அர்ப்பணித்து விட்ட பின் அவனை சார்ந்த மனைவி, மக்கள், சொத்து, சுகங்கள் எல்லாம், தாமாக பகவான் திருவடியில் சேர்ந்து விடுகின்றன.

அவன் உயிர் வாழ்வதற்காக மட்டுமே பற்றற்று கடமைகளைச் செய்கின்றான்.

**ஓம் தத் சத்**



எல்லையில்லா இந்த பிரபஞ்சம் முழுவதுமே, எங்கும், எதிலும் நீக்கமற நிறைந்து காணப்படும் அந்த ஒரே பொருளான பரம்பொருளைத் தவிர வேறு ஒன்றும் கிடையாது.

அப்படிப்பட்ட எல்லா இடங்களிலும் பரவிக்கிடக்கின்ற அந்த சத்திய வஸ்துவை பற்றி கூற வேண்டுமானால், அதுவும், அந்த சத்திய வஸ்துவே நாம ரூபங்களினாலே மாறிக் கொண்டு, தன்னை வெளிப்படுத்திக் கொண்டு தன்னைப் பற்றிக் கூற முடியுமே தவிர, வேறு எந்த வகையிலும் முடியாது.

இருக்கின்ற விசயத்தை யார் எந்த நாம ரூபத்தில் கூறினாலும், அது, அவனைப் பற்றி கூறப்பட்ட விசயங்களும், அவனிடமிருந்தே எடுக்கப்பட்டதாகத் தான் இருக்குமே ஒழிய வேறு எந்தக் கருத்தையும் சொந்தக் கருத்தாக யாராலும், என்றுமே கூற முடியாது. காரணம் எடுக்கப்பட்ட அனைத்தும் அவனிடமிருந்தே எடுக்கப்பட்டுள்ளது. கொடுக்கப்படுகின்ற அனைத்தும் அவனுக்கே கொடுக்கப்படுகின்றது.

**ஓம் தத் சத்**

